# கல்கி

KALKI 12.10.86 ரூ. 1.50



## "இவங்க கால்களைப் பாருங்கய்யா! கலெக்டரிடம் சொல்லுங்கய்யா!"



* அமைச்சர் சிதம்பரத்திடம் பரிசு பெறும் ஸ்ரீநிவாஸ்



* ஸ்ரீநிவாஸ்

தமிழ்நாட்டில்...

# முதல் ராங்க் எடுப்பதே முட்டாள்தனம்!

**38,000** மாணவ மாணவிகள் கலந்து கொண்ட ஒரு தேர்வில் அகில இந்தியாவிலேயே முதல் ராங்க் பெற்றான் கே. ஸ்ரீநிவாஸ். ஆனாலும் என்ன? 'முதல் ராங்க் எடுத்ததே முட்டாள்தனம்' என்று மனம் நொந்து போகும் அளவுக்கு அவனுக்கு ஏமாற்றங்கள்!

ஐந்நூறுக்கு 471 மார்க் வாங்கியுள்ள தனக்கு நிச்சயம் பி.ஈ. கம்ப்யூட்டர் அல்லது எலெக்ட்ரானிக்ஸ் பிரிவு கிடைக்கும் என்று மனப்பூர்வமாக நம்பி நுழைவுத் தேர்வை எழுதினான் ஸ்ரீநிவாஸ். ஆனால், 'பி.ஈ. பிரிண்டிங் டெக்னாலஜி ஸீட் உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏற்றுக் கொள்ளத் தயாரா?' என்று கார்டு வந்தபோது இடிந்து போனான். அதை வேண்டாம் என்று சொல்லி விட்டுக் காத்திருக்கத் தீர்மானித்த போது, "சேலம் இன்ஜினியரிங் கல்லூரிக்குப் போகிறாயா?" என்று கேட்டு இன்னொரு கார்டு. ஆனால் ஸ்ரீநிவாஸால் சென்னையை விட்டுப் போக முடியாது. காரணம் அவன் அம்மாவின் உடல்நிலை. வருடத்தில் குறைந்த பட்சம் ஒரு மாதமாவது ஜி. ஹெச்சில் இருதய நோய்க்காக அனுமதிக்கப்படும் அம்மாவின் மனோபலத்துக்கு ஸ்ரீநிவாஸ் முக்கிய தேவை. பின்னர், "பிரிண்டிங் டெக்னாலஜி படிக்கிறாயா?" என்று கேட்டு மீண்டும் ஒரு கார்டு. அடுத்து இன்னொரு கார்டு. "பி. டெக். கெமிகல் டெக்னாலஜி தேவையா?" என்று கேட்டு வந்தது. இனியும் நாட்களை வீணடிப்பதில் பயனில்லை என்று தன் தலைவிதியை நொந்து கொண்டே ஏ.ஸி. டெக்கில் சேர்ந்துவிட்டான் ஸ்ரீநிவாஸ்.

இப்போதுதான் ஸ்ரீநிவாஸிற்கு அப்பாவின் மேல் கோபம் கோபமாக வந்தது. மாநில அரசின் மேல்நிலைப் பள்ளியில் (+2) சேர்க்காமல் அகில இந்திய மேல்நிலைப் பள்ளியில் (CBSE) தன்னை ஏன் சேர்த்துவிட்டார் இந்த அப்பா? CBSEல் அதிக மார்க்குகள் வாங்குவது மிக மிகக் கடினம். ஆனால் மாநில அரசின் மேல்நிலைப் பள்ளி தேர்வில் மார்க்குகள் சுலபமாக வாங்கிவிடலாம். மேற்படிப்புக்கு நுழைவுத் தேர்வு மார்க்குடன், மேல்நிலைப் பள்ளித் தேர்வில் கணிதம், பௌதிகம், முதலிய பாடங்களில் வாங்கிய மார்க்குகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டுதான் மாணவர்கள் கேட்கும் ஸீட்டைக் கொடுப்பார்கள். "அகில இந்தியாவிலேயே நீ CBSEல் முதலாவதாக வந்து என்னதான் பிரயோஜனம்?" என்று நண்பர்கள் கேட்கும்போது இடிந்து போகிறான் ஸ்ரீநிவாஸ்.

"அவன் கேட்ட க்ரூப் கிடைக்கவில்லை என்று 'ஓ'வென்று ஒருநாள் முழுவதும் அழுது கொண்டிருந்தான். திறமைக்குத் தமிழ்நாட்டில் இடமில்லையா? ஊக்குவிப்பாரில்லையா?" என்று பரிதாபமாகக் கேட்டார் ஸ்ரீநிவாஸின் அப்பா கோதண்டராமன்.

"நான் கேட்ட ஸீட் எனக்குக் கிடைக்காது போனாலும், இப்போது சேர்ந்துள்ள கெமிகல் டெக்னாலஜியில் நன்றாகப் படித்துச் சிறப்பான பெயரைப் பெறுவேன் என்று கூறும் ஸ்ரீநிவாஸ் "பெற்றோர்கள் தங்களது குழந்தைகளை CBSE பள்ளியில் சேர்ப்பதற்குப் பலமுறை யோசிக்க வேண்டும்!" என்று கூறுகிறான்.

— எல். லட்சுமி

# "இவங்க கால்களைப் பாருங்கய்யா! கலெக்டரிடம் சொல்லுங்கய்யா!"

ஏர் ஹாரன் அலறலுடன் அந்தக் கிராமத்தை நாங்கள் அடைந்த போது, சூரியன் அவசர அவசரமாக, அம்பார மேகங்களுக் கிடையில் ஒளிந்து, மறைந்து இறங்கிக் கொண்டிருந்தான்.

"ஆவுடையாபுரம் டிக்கெட்டெல்லாம் எறங்குங்க!"

இறங்கினோம். பொட்டை வெயில். புழுதி கலந்த மண்.

"பா, பா!" என்று ஒரு பிஞ்சுக் குரல். திரும்பிப் பார்த்துத் திடுக்கிட்டோம்.

அந்தக் குழந்தை... அந்தக் குழந்தை...

உடலை மூடத் துணியின்றிக் கறுத்திருந்தது. தலை பெருத்திருந்தது. கண்களில் சூன்யம். கடை வாயில் ஒழுகும் எச்சில். நாக்கு மட்டும் மிக லேசாகப் புரள, மறுபடி

"பா, பா!"

அந்தக் குழந்தை அந்த மண்ணில் உடலை இழுத்தது. தவழப் பார்த்துத் தொய்ந்தது. கால்கள் ஒத்துழைக்கவில்லை. சூம்பிப் போன நாணல் கால்கள்.

நேற்றுப் பிறந்த கன்று போல், துள்ளி விளையாட வேண்டிய பருவம் —

மானின் வேகத்துடன், காற்றைக் கிழித்து ஓட வேண்டிய பருவம்.

"அட, என்ன அப்படிப் பார்க்கறீங்க? இந்தக் கொளந்தையைப் போல ஒரு நூறு கேஸாவது இருக்கும் இந்த ஊர்ல... எல்லாம் தண்ணிக் கோளாறு தான்!"



• முருகேசன்



• ரஷீதா பீவி தன் குழந்தைகளுடன்

''என்னது?''

''அட ஆமாங்க... குடிக்கறதுக்கு நல்ல தண்ணியில்ல... சாக்கடைத் தண்ணியைத் தான் சுதந்திரம் வந்த நாள்லேர்ந்து குடிக்க றோம். பக்கவாதம், முடக்கு வாதம், காலரா.. எல்லாத்திலயும் அடிபட்டுப் போய்ட் டோம்.''

இந்த ஆவுடையாபுரம் விருதுநகரிலி ருந்து சுமார் இருபது கி. மீ. தூரத்தில் உள்ளது. குறுகலான, சாக்கடைகள் நெளியும் தெருக்களைக் கொண்ட கிராமம். பத்திரிகைக் காரர்கள் என்று தெரிந்தவுடன் ஊரின் சிறு வர்கள், சிறுமியர்கள், பெரியோர்கள் அத்தனை பேரும் எங்களைச் சூழ்ந்து கொண் டார்கள். அந்தக் குழந்தைகளில் சில இழுத்து இழுத்து நடந்து எங்கள் பின்னால் வந்தன. பக்கவாதத்தில் பாதிக்கப்பட்ட பெரியவர் களில் சிலர் ஒரு கையை மடித்து வைத்துக் கொண்ட நிலையுடன் எங்களைத் தொடர்ந் தனர்.

வீடுகள், குடிசைகளை விடச் சற்றே மேம் பட்ட தரத்தில் அமைந்திருக்க, தாழ்வான ஓட்டுச் சரிவின் கீழ், தாய்கள்; முடக்கு வாதக் குழந்தைகள். இதோ ஒரு வீடு. ரவீந்தா பீவி தன் இரண்டு குழந்தைகளுடன். ஒரு பெண். ஓர் ஆண். ஆசைக்கும், ஆஸ்திக்கும்



* மதார்சா சாஹிபும், குடும்பமும்

என அமைந்தும் கூட என்ன பலன்? அந்தக் குழந்தைகளின் எதிர்காலம்?

வீட்டுக்கு வீடு இந்த அவலம் ஏன்?

''சார், ஊரை ஒட்டின மாதிரி கௌசிக நதி ஓடுது. அதில வர்ற தண்ணியைத்தான் நாங்க குடிக்கக் கொள்ள, சோறு பொங்க எல்லாத்துக்கும் எடுத்துக்கறோம். அந்த ஆறு விருது நகர்லேர்ந்தே வருது. விருது நகர் சாக்கடைத் தண்ணியப் பூரா இதில சேர்த்து விட்டுடறாங்க. அந்தத் தண்ணியை வேறு வழியில்லாம குடிச்சுக் குடிச்சுத் தான் இந்தமுடக்கு வாதம் வந்து சேர்ந்துக்கிட்டது. இதை உட்டா ஊருக்குள்ளார ஓர் ஊரணி. அந்த ஊரணியில ஊர்க் கழிவுத் தண்ணி பூரா கலக்குது. ஊரணிக்குப் பக் கத்தில தான் பொதுக் கிணறு. அதில ஊறுற தண் ணியை எடுத்துச் செலவழிச்சாலும்



* சம்சுக்கனி ராவுத்தர்

இதே கதிதான். வயசானவங்களுக்குப் பக்க வாதம். கொளந்தைங்களுக்கு மொட்க்கு வாதம். இது போதாதுன்னு காலரா வேற அடிக்கடி இந்த ஊர்ப் பக்கம் வந்துட்டு வந்துட்டுப் போகுது!'' என்றார் ஊரைச் சேர்ந்த தங்கராஜ். எங்களுடனேயே சுற்றிச் சுற்றி வந்தார்.

''நீங்க மதார்சா சாஹிபை அவசியம் பாக்கணும் வாங்க'' என்று அழைத்தார்.

''யாரது?''

''ஒரு குடும்பத் தலைவரா இருந்தவரு... இன்னிக்கு... ஹூம்... நேர்ல பாருங்க ளேன்.''

இன்னொரு குறுகலான தெரு. இன்னொருஓட்டுவீடு. கடப்பைக்கல்திண்ணை.

''அவர் தான் மதார் சாஹிப்'' என்றார்கள். கூச்சல் கேட்டு அவர் வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்திருக்க வேண்டும்.

''வாங்க அ அ'' — இழுத்துக் கொண்டு போன குரல். ஒரே ஒரு கை மேலே எழுந்து வரவேற்றது. இன்னொரு கை எழவேயில்லை. அதேபோல் ஒரு கால்தான் செயல்பட்டது. இன்னொரு கால், ஊஹூம்.

''முன்னால கொடிக்கால்ல கூலி வேலை செய்ஞ்சுக்கிட்டிருந்தேன். இப்ப ரெண்டு வருஷமா இப்படி ஆயிட்டது. வீட்டை வித்து ஐயாயிரம் வரைக்கும் செலவு செய்ஞ்சும் சரியாகலே. பீச்சாங்கையாலதான் சாப்புடு வேன். எனக்கு ஆறு கொளந்தைங்க; ரெண்டு பொண்ணுங்க; நாலு பையனுங்க. கஷ்டந் தான். என்ன செய்யறது? இப்பவும் அதே தண்ணியத்தான் குடிக்கறோம். வேற வழியில் லையே!''

குழறிக் குழறிச் சொன்ன வார்த்தைகள் இவை. அவரது பன்னிரண்டு வயது பெரிய மகன் கோவையில் ஒரு கடையில் சின்னச் சின்ன வேலைகள் செய்கிறான். அவனுக்கு இளையவன் பொள்ளாச்சியில் ஒரு கடையில் வேலை செய்கிறான். இருவருமாய்ச் சேர்ந்து மாதம் நாற்பது ரூபாய் அனுப்புகிறார்கள். மனைவியும், ஒரு பெண்ணும் தீப்பெட்டி தொழிற்சாலையில் வேலை செய்து, ஒரு நாளைக்கு மூன்றோ, நான்கோ சம்பாதிக்கி றார்கள். குடும்ப வண்டியை ஓட்டிக் கொண் டிருந்த மதார்சா சாஹிப் அச்சு முறிந்த நிலை



* பா. விஜயன்



* தங்கராஜ்



* கழிவுநீர் கொண்டுவரும் கௌசிக நதி

யில் அமர்ந்திருக்கிறார். அவரிடம் விடை பெற்ற போது ஒற்றைக் கையைத் தூக்கிக் கும்பிட்டார்.

''ஏதா அஅவது செய்ய்ங்கய்ய்யா'' என்றார் மிகக் குழறி.

முகங்களைத் திருப்பிக் கொண்டு வந்து விட்டோம். அவரிடம் நாங்கள் என்ன பதிலைச் சொல்ல முடியும்?

இந்தத் தண்ணீர்ப் பிரச்னைக்கு ஊர்ப் பெரிய மனிதர்கள் யாரும் எந்தவிதமான முயற்சியும் எடுப்பதில்லையா?

பஞ்சாயத்து யூனியன் தலைவர் சம்சுக்கனி ராவுத்தர்தான் இந்தக் கேள்விக்குச் சரியான பதிலைச் சொல்ல முடியும் என்று விளக்கம் கிடைக்க, நாங்கள் சம்சுக்கனி ராவுத்தரை அவரது இல்லத்தில் சந்தித்தோம்.

''வெள்ளைக்காரன்கிட்ட இருந்து சுதந்திரம் வாங்கின பிறகு, காங்கிரஸ்காரன், தி. மு. க. காரன், அ. தி. மு. க. காரன் எல்லாருமே எங்க வாயில மண்ணைத்தான் போட்டிருக்காங்க. மூணு மாசத்துக்கு ஒருக்கா ரிப்போர்ட் போய்க்கிட்டுத்தான் இருக்கு சார். அதிகாரிகள் 'பாக்கலாம், பாக்கலாம்'னு தான் இப்பவும் சொல்றாங்க. அவனவன் நூறு பொய்யைச் சொல்லி ஆட்சிக்கு வந்திருக்கான். கம்மாய்க்குத் தண்ணி கொண்டு வருவேன்னு நான் ஒத்தைப் பொய்யைச் சொல்லிப் பஞ்சாயத்துத் தலைவரா உக்காந்துக்கிட்டிருக்கேன். தினமும் மக்கள் வசவு தான்! பக்கத்தில இருக்கிற மன்னார் கோட்டை பெரியகுளம் கம்மாய்க்குக் குல்லூர்ச் சந்தை அணைக்கட்லேர்ந்துவரவேண்டியதண்ணியைத் தான் கேக்கறோம். 'அங்கேயே தண்ணி இல்ல. எப்படி ஒனக்குக் கொடுக்கிறது'ன்னு கேக்கறாங்க. பத்து வருஷமாக் காய்ஞ்சு கெடக்குது இந்தக் கம்மாய். கே. கே. எஸ். எஸ். ஆர் வோட்டு கேக்க வந்தப்ப, 'தண்ணி வராம நான் இந்த ஊருக்கு வரமாட்டேன் மாமா'ன்னாரு.. எங்க தண்ணி வந்தது? நான் சுயேச்சை. எந்த கட்சி ஆட்சிக்கு வருதோ அதுக்கு ஆதரவாப் போவேன். மந்திரி, எம். எல். ஏ. வந்தா பொன்னாடை, மாலை மரியாதை எல்லாம் நடத்துவோம். ஆனா ஒண்ணும் நடக்க மாட்டேங்குதே. எங்களுக்கு. மன்னார் கோட்டைக்குத் தெற்குப் பக்கம் சிமெண்ட் தொழிற்சாலைக்குச் சொந்தமான இடத்திலே 'போர் வெல்' போட்டா நல்ல தண்ணி கிடைக்கும். சிமெண்ட் பேக்டரிக்காரங்க அந்த எடத்தைக் கொடுக்க ஒத்துக்கிட்டாங்க. கவர்மெண்ட் ஸ்டெப் எடுக்க மாட்டேங்குதே!'' என்றார் தலைவர் சம்சுக்கனி ராவுத்தர்.

இறங்கி நடக்கும் போது இன்னொரு இளைஞர் எதிர்ப்பட்டார். பக்கவாதத்தால் பிடிக்கப்பட்டவர். அந்த முருகேசன் இப்போது கொடிக்காலில் ஒற்றைக் கையால் வேலை செய்கிறார். அதுவும் தினம் வேலை கிடைக்காது. வேலை கிடைத்த நாட்களில் மூன்று ரூபாய் சம்பளம்.

தண்ணீர் பிடிக்க இப்படி எல்லா வயதினரும்



* எலும்புக் கூடான பழைய பள்ளி

உலா வருகிறார்கள்.

''என்ன எங்க ஊரைப் பார்த்துட்டீங்களா?'' என்று குரல் கேட்கத் திரும்பினால், கட்டபொம்மன் மீசையுடன் இன்னொரு இளைஞர். மா. விஜயன் என்று அறிமுகப்படுத்திக் கொண்டார்.

''ம்!'' என்றோம் சுரத்தில்லாமல்.

''உங்களுக்குக் காட்ட வேண்டியது இன்னும் இருக்கு வாங்க!'' என்று அழைத்தார்.

''இதோ இந்தக் கல்லுக் கட்டடம் 29.7.58 லகாமராஜாலதிறந்துவெக்கப்பட்ட கட்டடம். தாய்சேய் நல விடுதி. ஒரு காலத்



* சோம்பேறி மடமாக மாறிப் போன பழைய தாய்-சேய் நல விடுதி.

தில நர்ஸ் எல்லாம் இருந்தாங்க. ஒண்ணு ரெண்டு பிரசவம் கூட பாத்தாங்க. இப்ப என்னடான்னா சோம்பேறி மடமா மாறிப் போச்சு. உள்ள இருந்த கட்டில், பீரோ எல்லாத்தையும் திருடிட்டுப் போய்ட்டாங்க. கதவு ஜன்னல் எல்லாம் உடைச்சிட்டாங்க. ஆனா பில்டிங் பக்கா பில்டிங். இதைச் சரி பண்ணலாமே. இதோ இங்க பாருங்க. இன்னொரு தாய். சேய் நல விடுதி. புதுசாக் கட்டியிருக்

காங்க. ஆனா இப்பவும் ஆள் போடலே. உள்ள ஸ்கூல் நடக்குது. ரெண்டு ரூம் பில்டிங்கில ஒரு ஸ்கூல். வைக்க எடமில்லாம மைக்ரோஸ் கோப்பு, பாரோமீட்டர் எல்லாம் எப்படி இருக்குன்னு பாருங்க!

''என்னது... இந்த ஊர் ஸ்கூல் என்ன ஆச்சின்னு கேக்கறீங்களா? இந்தா பாருங்க. இந்த எலும்புக்கூடு பில்டிங்தான் ஸ்கூல்; 21.6.66 இல் தொறந்து வச்சாங்க. இப்ப இப்படி ஆய்டிச்சி. இதில ஸ்கூல் நடக்கற தில்ல. இடிஞ்சு விழுந்திருச்சுன்னு...? ஆனா இப்பவும் நம்ம ஊருக்கு இதான் ஓட்டுச் சாவடி. புது பில்டிங் கட்டியிருக்காங்க ஸ்கூலுக்குன்னு. அதுக்கு இன்னும் தொறப்பு விழாவே நடத்தலே. பூட்டிக் கெடக்கு. அதுக்குள்ள காரையெல்லாம் பேந்து போய்டிச்சி. வராந்தா சிமெண்ட் எல்லாம் பேந்து போய்டிச்சி.

''அதோ அதான் சத்துணவுக் கூடம். அந்த சிமெண்ட் கிராதியெல்லாம் எப்படி ஒடைஞ்சி விழுந்திருச்சி பாருங்க. எல்லாம் காண்ட்ராக்ட்காரங்களோட வேலே. இதோ அடிபம்பு போட்டிருக்கு. ஆனா ஹாண்டில் தான் இல்ல. தண்ணி வரலன்னு கழட்டிட்டாங்க...'' — மூச்சு விடாமல் ஒவ்வோர் இடமாகக் காட்டிக் கொண்டே நடந்தார் அவர். பஞ்சாயத்து யூனியன் தேர்தலில் நின்று வெற்றி பெற முடியாத கா. கா. தே. கா. காரர் இந்த மா. விஜயன்.

நாங்கள் பஸ் ஸ்டாண்டை நெருங்கினோம். விஜயனும் உடன் வந்தார். சுற்றி மறுபடி அந்தச் சின்னச் சின்ன முல்லே மொட்டுகளின் கும்பியடி.

ஊர் மனிதர்கள் இறைஞ்சும் முகத்துடன் எங்களை நெருங்கினார்கள்.

''இவங்களைப் பாருங்கையா... கலெக்டர் கிட்ட சொல்லி ஏதாவது ஏற்பாடு பண்ணுங்கையா!'' என்றார்கள்.

மௌனமாகத் தலையசைத்தோம். இந்த ஊரை எங்கள் கண்ணில் காட்டக் கூடாது என்பதற்காகத்தான் சூரியன் அவ்வளவு சீக்கிரம் ஒளிந்து கொண்டானா என்ன?

வாழ்க்கை என்பது கலைந்து போகும் கனவாக இருக்கலாம். ஆனால் ஒருநாள் வாழ்க்கை என்றாலும் உருப்படியாக வாழ வேண்டாம்? பஸ் ஏறுகையில் எங்கள் நெஞ்சங்களில் பாறாங்கற்கள்.

காமராஜர் மாவட்டம்

நேரில் சென்று, தகவல்களை சேகரித்து, கட்டுரை வடிவம் தந்தவர்கள்:

உமேஷ் — பர்வா

புகைப்படங்கள்,
மேலட்டை வண்ணப்படம்:

சே. வி. ஆனந்த்

# அடுத்த இதழ்...

காமராஜர் மாவட்டத்தில் சுற்றி — II



''பஸ் வரணும்னா
இடைத்தேர்தல் வரணும்!''

— ஒரு கிராமத்தின் அவலம்

மரங்களை வெட்டுவோம்:
பாக்கெட்டை நிரப்புவோம்!



''சொற்களைவிட செயல்களையே
விரும்புகிறேன்!''

— காமராஜர் மாவட்டக் கலெக்டர் பேட்டி

# அது 'சிதம்பர' ரகசியம் போலும்!

* 28.9.86 கல்கி தலையங்கம் படித்தேன். லஞ்ச ஊழலுக்கு வழிகாட்டியே அரசியல் வாதிதான் என்ற வரிகள் வெகு அருமை. எல்லாத் தரப்பினர் மீதும் 'ரெய்ட்' நடத்த விஜிலன்ஸ், சி. பி. ஐ. துறையினரை ஊக்கு விக்கும் அமைச்சர், அரசியல்வாதிகளை மட்டும் குறிப்பிடாதது ஏன்? அது சிதம்பர ரகசியம் போலும்!

இளையான்குடி, கே. எம். ஜான் முஹம்மது.

* தலையங்கத்தில் வரிக்கு வரி பாராட்டிக் கொண்டே வந்து கடைசியில் (வரம் கொடுத்தவன் தலையில் கை வைத்த கதை போல்) ஒரு குட்டு குட்டி விட்டீரே!

சீர்காழி, வசந்தப் பிரியன்.

* என்ன வார்த்தை சொல்லி விட்டீர்கள்? அரசியல்வாதி மீது வ. வ. இலாகா படையெடுப்பா? எல்லாக் கறுப்பு, வெளுப்பு பணத்தையும் அவர்கள் பெயரிலேயே வைத்துக்கொள்ள அவர்கள் என்ன புத்தியில்லாதவர்களா? அவர்களின் சுற்றுவட்டச் சொந்த பந்தங்கள் பெயரிலும் 'பினமி'யிலும் அல்லவா அவர்கள் பணம் சிதறிக் கிடக்கிறது? உங்களுக்கு விவரமே பத்தலே சார்!

திருச்சி — 1. எஸ். நாகராஜன்.

* இவ்வார கல்கியில் எங்கள் மாவட்ட கலெக்டரைப் பேட்டி கண்டு தாங்கள் எழுதியிருந்தது மிகவும் அருமை. குறிப்பாக, எங்கள் மாவட்டத்தில் உள்ள ஆறுகள், வாய்க்கால்கள், குளங்கள் ஆகியவற்றைத் தூர் எடுக்கும் பிரச்னையும், இவைகளைச் சிலர் பணபலத்தால் ஆக்கிரமிப்புச் செய்யும் பிரச்னையும் மிகவும் முக்கியமானவை.

காட்டுமன்னார்கோயில், கேசவ செல்வன்.

* தென்னாற்காடு மாவட்டக் கலெக்டர் கல்கி சுட்டிக் காட்டியிருக்கும் ஒவ்வொரு சிறு குறையையும் கூட மிகவும் நுட்பமாகக் கேட்டு, அறிந்து, 'இந்நாள் வரையிலும் எனக்குத் தெரியாத பல குறைகளையும் சுட்டிக் காட்டிய உங்களுக்கு நன்றி சொல்கிறேன்' என்று மனந்திறந்து கூறியிருப்பது அவர் மீது எங்களுக்கு நம்பிக்கையை ஏற்படுத்தி விட்டது!

நெல்லிக்குப்பம், ஜெ. முகம்மது பாரூக்.

* 'கனவுக்குள் படுத்துறங்கும் தேசம்' கவிதை முதல் தரமானதாக இருந்தது. படிக்கப் படிக்கக் கருத்தாழம் மிகுந்து கொண்டே சென்றது. நாட்டு நடப்பை நல்லதொரு தலைப்புக் கொடுத்து நயம்பட விளக்கிவிட்டார் தமிழன்பன்.

குடியாத்தம், ஸ்ரீ சத்யசாயி பாபா தாசன்.

* தமிழன்பனின் கவிதை எமக்களித்த காயம் என்றும் வடுவாக இருக்கும். மருதுவின் ஓவியம் கவிதாசிரியனின் கையுடன் கை சேர்த்துக் கொண்டது.

குடியாத்தம் — 2. கே. வி. எஸ். மணியன்.

* ஒன்றுமில்லாத ஊர்களிலெல்லாம் மருதைப் பிள்ளையைப் போன்ற தொழிலதிபர்கள் தொழில் தொடங்கினால் பெண்ணாடம் போன்ற வளர்ச்சியைத் தமிழகம், ஏன் பாரதம் முழுவதும் பெற்று வளர்ச்சியில் ஜப்பானையும் மிஞ்சலாம்.

திருச்சி — 21, கே. என். ராமகிருஷ்ணன்.

* ஸ்ரீகாந்த் பேட்டி, அவருடைய ஆட்டத்தைப் போலவே பரபரப்பாகவும், சுறுசுறுப்பாகவும், இருந்தது. உண்மையிலேயே ஒரு கிரிக்கெட் ரசிகன் நேரில் என்னென்ன கேள்விகளைக் கேட்க நினைப்பானோ, அவற்றையே கேட்டிருந்தீர்கள்.

ஜலகண்டபுரம், என். பிரபாகரன்.

* ஸ்ரீகாந்திடம் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் பணம் பண்ணுவது பற்றித் துருவித் துருவிக் கேட்க வேண்டுமா? எந்தத் துறையில் தான் பணம் இல்லே? ஆன்மீகத் துறையில் உள்ளவர்களின் மடங்களுக்கும், ஏழுமலையான் போன்ற தெய்வங்களுக்கும் கூடக் கோடிக் கணக்கில் பணம் சேர்வதை நாம் பார்க்கவில்லையா!

சென்னை — 17, நாடோடி.

* மணிக்கொடியானின் போட்டிக் கதையில் வாழ்க்கையின் இறுதி அத்தியாயத்திலும் புதிய பாடத்தினைக் கற்றுக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு உள்ளாகும் மனித உள்ளங்கள், எப்படியெல்லாம் குமுறி ஓயும் என்பது பிசிறு தட்டாமல் சொல்லப்பட்டிருந்தது.

திருநெல்வேலி, எஸ். சுந்தர்.

* குழந்தைக் கலைஞன் கிளின்டின் சோகக் கதை நெஞ்சை நெருடி விட்டது. இப்புவியில் தான் வாழப் போகும் காலம் வெகு குறைவே என்பதைத் தீர்க்க தரிசனத்துடன் தெரிந்து கொண்டுதானோ என்னவோ, அந்தப் பாலகன், அத்தனை ஓவியங்களை வரைந்து வைத்து விட்டுச் சென்று விட்டான்?

சென்னை — 15, சைதை வி. முரளி.

* இந்த வாரம், மூன்றாம் அட்டையில் வெளிவந்திருக்கும் படகுப்போட்டி வண்ணப் படம் கண்களுக்குக் குளிர்ச்சியாக இருந்தது... பாடலும் 'Super!'

விருத்தாசலம், கே. நாகராஜன்.

## ஃபாரெக்ஸ்®
## முதலான விருப்பம்!

# பாப்பா வளர்ச்சிக்கான திட உணவுகளில் பாசத்தாய் அளிக்கும் முதலிடம் ஃபாரெக்ஸ்®

தாய், தன் குழந்தைக்கு தேர்ந்தெடுக்கும் முதலான திட உணவு புதிய செழுமையான ஃபாரெக்ஸ். காரணம்:

பாப்பாவின் உடல் நலத்திற்கான புரதமும், ஜீரணத்திற்கு உகந்த கொழுப்புச் சத்தும் சரியான அளவில் கொண்டது.

பாப்பாவுக்கு ஆரோக்கியமான ரத்தத்தை தரவல்ல இரும்புச் சத்துள்ளது.

எலும்பும் பற்களும் வலுவோடு வளர்ந்திட கால்சியமும் ஃபாஸ்ஃபரஸும் 2:1 என்ற அளவில் சேர்க்கப்பட்டது.

தின்னத் தெவிட்டாதது; கலப்பதும் கொடுப்பதும் எளிது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தாலே போதும்.

**தாயன்பைக் கூறிடும்**
**தரமிக்க திட உணவு ஃபாரெக்ஸ்®**

CLARION/B/GX/15/203

மின்னும்
மேனி மெருகுக்கு
ரெக்ஸோனா

மின்னி மிளிரும் மேனி...எந்நாளும்
உங்கள் பொன்னான கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா
(தேவதாரம்) ஆகிய நாலு வகை
இயற்கைத் தைலங்களின் நற்கலவையான
ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு
இயல்பான வழியாகும்.







# ரெக்ஸோனா

**உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 91 2416 TM

# ஊழலில் கொழிக்கும் வணிக வரித்துறையும் வியாபாரிகளும்!

மதுவிலக்கை அமல் செய்தபோது, அரசுக்கு ஏற்பட்ட வருமான இழப்பை ஈடு செய்வதற்காகத்தான், விற்பனை வரியை அறிமுகம் செய்தார் ராஜாஜி. அதுவும் ரூபாய்க்கு ஒரு தம்பிடி என்ற மிகக் குறைந்த அளவில். அவருக்குப் பிறகு ஆட்சிக்கு வந்தவர்கள் உண்மையிலேயே நாணயஸ்தர்களாக இருந்திருந்தால், மதுவிலக்கை ரத்து செய்த போது, விற்பனை வரியையும் ரத்து செய்திருக்க வேண்டும். யாரும் அப்படிச் செய்யவில்லை! மாறாக விற்பனை வரியை அதிகரித்துக் கொண்டே போனார்கள்.

அப்படியானால், விற்பனை வரி மூலம் கிடைக்கும் வருமானத்தோடு, சாராயக் கடைகளின் மூலம் கிடைக்கும் வருமானமும் சேர்ந்து அரசுக்கு ஏராளமாய் வருமானம் கிடைக்குமே! அது நல்லதுதானே என்றால், அப்படி நல்ல காரியங்கள் நடந்து கொண்டிருப்பதாகவும் தெரியவில்லை. இன்னும் பல கிராமங்களில் குடிநீர் வசதி கூடச் செய்து தரப்படவில்லை என்பதுதான் நிதர்சன உண்மை.

ஆக, இந்த வருமானங்களெல்லாம் எங்கே போகின்றன? சாராயத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்தில் பாதிக்குமேல் கட்சிக்காரர்களுக்குப் போகிறதென்றால், விற்பனை வரி — வணிக வரி மூலம் கிடைக்கும் வருமானத்தில் பாதிக்குமேல் அரசு அதிகாரிகளுக்குப் போய்க் கொண்டிருக்கிறது. இந்தக் குற்றச்சாட்டை நாம் ஏதோ மேம்போக்காகச் சொல்லுவதாக யாரும் நினைத்துவிட வேண்டாம். காமராஜர் மாவட்டத்தில் நாம் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்த போது, விருதுநகரில் நம்மைச் சந்தித்த சில வியாபாரிகள் காட்டிய ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டுதான் சொல்லுகிறோம்.

வணிக வரித்துறை அதிகாரிகள் எப்படி லஞ்சம் வாங்குகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு முன்பு, விற்பனை வரி பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்வது நல்லது.

விற்பனை வரி என்பது இப்போது ஒருமுனை வரியாக எட்டு சதவிகிதம் வசூலிக்கப்படுகிறது என்றாலும், எல்லாப் பொருள்களுக்கும் அந்த எட்டு சதவிகிதமே வசூலிக்கப்படுவதில்லை. மிளகாய் வற்றல், கொத்துமல்லி போன்றவற்றுக்கு எட்டு சதவிகிதம் என்றால், கடலெண்ணெய், நல்லெண்ணெய் போன்ற எண்ணெய்வகையறாக்களுக்கு ஐந்து சதவிகிதமாகக் குறையும். அவையே எண்ணெயாக்கப்படாமல் கடலை, எள் என்று எண்ணெய்வித்துக்களாக இருந்தால், மூன்று சதவிகிதமாகிவிடும்! அரிசி, கம்பு, கேழ்வரகு, சோளம் போன்ற உணவு தானியங்களுக்கு விற்பனை வரியே கிடையாது!

சரி, இந்த விற்பனை வரி எங்கே — யாரிடம் வசூலிக்கப்படுகிறது? இங்கே ஊழல் எப்படிக் கொழிக்கிறது? உதாரணமாக மிளகாய் வற்றலை எடுத்துக் கொள்வோம்.

ஒரு விவசாயி தன்னுடைய நிலத்தில் விளை






வித்த மிளகாய் வற்றலை விற்றாக வேண்டும். எல்லாவற்றையும் பக்கத்து வீட்டுக்காரருக்கே விற்று விட முடியுமா? முடியாது. ஒரு வியாபாரிக்குத்தான் விற்றாக வேண்டும். எங்கோ வெளியூரிலிருக்கும் வியாபாரிகளோடு அந்த விவசாயி எப்படித் தொடர்பு கொள்ள முடியும்? அதனால் உள்ளூரில் இருக்கும் கமிஷன் ஏஜெண்டுகளைத்தான் அவர் அணுகுவார். உடனே அந்த ஏஜெண்டும் அந்த விவசாயியினுடைய வற்றலை நல்ல விலைக்கு விற்றுத் தருவதாகச் சொல்லி, விவசாயி வீட்டுக்கே சென்று வற்றலை எடை போட்டு எடுத்துக் கொண்டு வந்து தமது கமிஷன் மண்டியில் வைத்திருப்பார்.

இப்படிப் பல விவசாயிகளிடமிருந்தும் அந்த ஏஜெண்ட் கொண்டு வந்த பலரக மிளகாய் வற்றல்கள் மண்டியில் இருக்கும். அங்கே வரும் வெளியூர் வியாபாரிகள் வற்றல்களின் தரத்துக்குத் தக்கபடி விலை கேட்பார்கள். அந்த விலைகள் அந்தந்த விவசாயிகளுக்குச் சம்மதம் என்றால், உடனே அந்த கமிஷன் ஏஜெண்ட் அந்த வியாபாரிக்கு அவற்றை விற்று, விற்ற பணத்தில் தனக்கொரு கமிஷன் தொகையை எடுத்துக் கொண்டு மீதியை அந்தந்த விவசாயிகளிடம் கொடுத்து விடுவார். இதுதான் விற்பனை முறை.

விவசாயிகளிடமும் கமிஷன் ஏஜெண்டுகளிடமும் இருக்கவரை அந்த மிளகாய் வற்றலுக்கான விற்பனை வரிப் பேச்சே கிடையாது. ஆனால், வியாபாரி கமிஷன் ஏஜெண்டிடம் வந்து விலை கூறி வாங்கி எடுத்துச் செல்கிறார் அல்லவா, அங்குதான் இந்த விற்பனை வரி வருகிறது!

உதாரணமாக, ஒரு கிலோ மிளகாய் வற்றல் பத்து ரூபாய் வீதம் ஆயிரம் கிலோ வற்றலை வாங்கி எடுத்துச் செல்லும் வியாபாரி, விற்பனை வரியாக எண்ணூறு ரூபாய் செலுத்தி விட்டுத்தான் அந்த வற்றலையே தமது இடத்துக்குக் கொண்டு வரவேண்டும். ஆனால், அந்த வியாபாரி அதைச் செலுத்த மாட்டார். வற்றலை லாரியில் ஏற்றிக் கொண்டு வரும்போது, வழியில் தென்படும் இரண்டு மூன்று சோதனைச் சாவடிகளுக்கும் தலா நூறு ரூபாய் வீதம் முந்நூறு ரூபாயை லஞ்சமாகக் கொடுத்துவிட்டு ஜரூராக வந்து சேர்ந்து விடுவார். ஆக, வரியாகச் செலுத்த வேண்டிய எண்ணூறு ரூபாயில் முந்நூறு லஞ்சம் போனாலும் அந்த வியாபாரிக்கு முழுசாக ஐந்நூறு ரூபாய் லாபம்! இதில் அந்த கமிஷன் ஏஜெண்டுக்கும் பங்கு உண்டு!

சரி, அந்த வியாபாரி வழியிலுள்ள சோதனைச் சாவடி அதிகாரிகளின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு வந்து விட்டால், அதற்கு அந்த அதிகாரிகளை எப்படிக் குற்றம் சொல்ல முடியும் என்றும் சிலர் கேட்கலாம். நியாயமான கேள்விதான். ஆனால் அப்படி நடக்கச் சாத்தியமே இல்லை. அதற்காகத்தான் இரண்டு கட்டங்களில் சோதனை இடும் முறை இருக்கிறது. எப்படி?

முதன் முதலில் கமிஷன் ஏஜெண்ட் ஒருவர் ஒரு விவசாயியிடமிருந்து வற்றலைக் கொண்டு வந்து தமது மண்டியில் வைக்கிறார் பாருங்கள்; அது ஒன்றும் போனோம் வந்தோம் விவகாரமில்லை. அந்த மிளகாய் வற்றலை விவசாயியின் வீட்டில் எடை போட்டுக் கட்டும்போதே, அந்த ஏஜெண்ட் வணிக வரித் துறை அலுவலகத்திலிருந்து வாங்கிக் கொண்டு வந்த பாரங்களில் (Forme XX) கொண்டு வரும் பொருள் பற்றிய முழு விவரங்களையும் எழுதித்தான் கொண்டுவர வேண்டும். அப்படிக் கொண்டு வரும்போது, வழியிலுள்ள சோதனைச் சாவடியில், அதன் முதல் பிரதியைக் கொடுத்துவிட்டு, இரண்டாவது பிரதியைக் கையில் வைத்திருக்க வேண்டும். அதனால் எந்த நேரத்திலும் வணிக வரித்துறை அதிகாரிகள் அந்த கமிஷன் ஏஜெண்டின் மண்டியைச் சோதனையிட்டு, வரி ஏய்ப்பைச் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம்!

அப்படிச் செய்துவிட்டால் எப்படி லஞ்சம் வாங்குவது? அதனால் எந்த அதிகாரியும் அப்படிச் செய்வதில்லை. முதல் நாள் சோதனைச் சாவடியில் பெற்றுக் கொண்ட முதல் பிரதிகளை அப்படியே முனை மழுங்காமல் எடுத்துக் கொண்டு வந்து அந்த கமிஷன் ஏஜெண்டிடமே திருப்பிக்கொடுத்து விட்டு, ஒரு மூட்டைக்கு இவ்வளவு என்று 'ரேட்' பேசி வாங்கிச் சென்று விடுகிறார்கள் அதிகாரிகள்.

'இவையெல்லாம் சுத்தப் பொய்!' என்று வணிகவரித்துறை அதிகாரிகள் சத்தியம் செய்யக்கூடத் தயங்க மாட்டார்கள் என்றாலும் அந்தச் சத்தியம் கடைந்தெடுத்த பொய்ச் சத்தியமாகத்தான் இருக்க முடியும். ஏனெனில், 'இதோ பாருங்கள்... வணிக வரித் துறை அலுவலகத்தில் இருக்க வேண்டிய முதல் பிரதிகளையும்... எங்களிடம் இருக்க வேண்டிய இரண்டாவது பிரதிகளையும்... இரண்டும் எப்படி எங்களிடம் வந்தன? நன்றாகப் பாருங்கள், இரண்டு பிரதிகளிலும் ஒரே வரிசை எண்! ஒரே விஷயம்தான் இரண்டிலும் எழுதப்பட்டிருக்கிறது! அதிகாரிகள் சுத்தமானவர்களாக இருந்தால் முதல் பிரதி எப்படி எங்கள் கைக்கு வரும்?' என்று நூற்றுக் கணக்கான பிரதிகளை எங்களிடம் காட்டினார்களே சில கமிஷன் ஏஜெண்டுகள்; அது நிஜம்; நிஜம்; நிஜம்!

ஆங்காங்கே ஒரு சில அதிகாரிகள் சத்திய சந்தர்களாக இருக்கலாம். ஆனால் பொதுவாக ஒரு கொள்ளை மிக அமைதியாக, நடந்து கொண்டிருக்கிறது, என்பதை மறுக்க முடியாது. அதை ஆட்சித் தலைமையும் தட்டிக் கேட்கத் திராணியில்லாமல் இருக்கிறது. காரணம், அரசியல்வாதியின் கை சுத்தமாக இல்லாததுதான்! மேலும் இது தனிப்பட்ட கொள்ளை அல்ல; எல்லா மட்டங்களிலும் இருக்கிற அத்தனை பேரும் சேர்ந்து அடிக்கும் கூட்டுக் கொள்ளை என்கிறார்கள். என்ன செய்வது? பொது மக்களிடம் நாட்டு நடப்பு பற்றியதொரு விழிப்புணர்ச்சி ஏற்படாத வரையில், இதுபோன்ற கொள்ளைகள் தொடர்ந்து கொண்டேதான் இருக்கும். வேறு வழியில்லை.

— இளங்கோவன்




# கல்கி

1986 அக்டோபர் 12
மலர் 45 இதழ் 11
அக்ஷய புரட்டாசி 26




# காந்தி பிறந்த நாட்டில் ஏன் இந்த நிலை?

தெய்வங்களே உங்களுக்கு நன்றி கூறுகிறோம். எங்கள் பிரதமரின் இன்னுயிரைக் காத்துத் தந்ததற்காக உங்கள் சிலா வடிவங்களை எங்கள் ஆனந்தக் கண்ணீரால் அபிஷேகிக்கிறோம்! தவ சிரேஷ்டர்களே, உங்களை நமஸ்கரிக்கிறோம். உங்கள் தவ வலிமையால் தான் இந்த நாடு இன்று ஒரு பெரிய அவமானத்திலிருந்து தப்பியது என்று கருதி உங்களைப் பூஜிக்கிறோம்! இந்தியாவில் பாக்கியிருக்கிற ஒரு சில நேர்மையாளர்களே, உங்களை வணங்குகிறோம். உங்கள் சத்திய வாழ்க்கையின் பலனைத்தான் பிரதமர் மீது குண்டு பாயாமல் குறி தப்பியது என்று நம்பி உங்களை வாழ்த்துகிறோம்!

புதுதில்லி, காந்தி சமாதி அருகே நடந்த நிகழ்ச்சி அளித்த அதிர்ச்சியும் தொடர்ந்து பிரதமர் உயிர் தப்பிவிட்டார் என்று அறிந்ததில் ஏற்பட்ட மகிழ்ச்சியும் இரண்டு கேள்விகளை எல்லோருடைய மனத்திலும் நிச்சயம் எழுப்பும். முதலாவது, பிரதமருக்குப் பாதுகாப்பு அளிக்கும் ஏற்பாடுகளில் இத்தனை ஓட்டைகளா? செக்யூரிடி என்பதே இன்செக்யூராக அல்லவா இருக்கிறது? அமெரிக்கா சிரிக்கிறதே! 'பிரதமர் வருகிற இடத்தில் ஒளிந்து கொள்ள இத்தனை மறைவிடங்கள் இருக்கலாமா? புதர்கள் ஏன் அழிக்கப்படவில்லை? அல்லது சோதிக்கப்படவில்லை?' என்று கேட்கிறதே? இதற்கு என்ன பதில்? வழக்கம் போல் சில பெருந்தலைகள் உருளும். அவர்கள் இடத்தில் வேறு தலைகள் முளைக்கும். சில நாட்களுக்குச் சுறுசுறுப்பு, பிறகு எப்போதும் போன்ற மெத்தனம். இதுதானே நடைமுறை?

'பிரதமர் தம்மை இத்தனை அபாயங்களுக்கு உட்படுத்திக் கொள்ள வேண்டுமா?' என்பது இரண்டாவது கேள்வி. தமது நாட்டிலேயே ஒரு பிரதமர் பாதுகாப்புக் கருதி ஏறத்தாழக் கைதி போல இருக்கிற நிலை வருந்தத்தக்கதுதான். ஆனால் இன்றையச் சூழலில் அது அத்தியாவசியமாகிறதே? இங்குமங்கும் போவதையும் வருவதையும் குறைத்துக் கொண்டால் என்ன?

இந்த இரு கேள்விகளும் பதில்களைக் கோரிக் கதறுகின்றன. ஆனால் சரியான விடைதான் கிடைக்கவில்லை. ஒரு ஜனநாயக நாட்டில் அதன் பிரதமர் சுதந்திரமாக உலவி வர முடியாத நிலை விரும்பத் தக்கதோ, வரவேற்கத் தக்கதோ இல்லை. பாதுகாப்பு ஏற்பாடுகள் போதவில்லை என்பது பலமுறை நிரூபிக்கப்பட்டு விட்டது. முன்னேற்றத்துக்கு இடமிருக்கிறது. ஆனால் என்னதான் பலமான பாதுகாப்பு முன்னேற்பாடுகளைச் செய்தாலும் ஒரு தேசத்தைக் கூடக் காத்து விடலாம். ஒரு தனி மனிதரைக் காப்பது என்பது ரொம்பக் கஷ்டம். இதை உலக சரித்திரமே பலமுறை நிரூபித்திருக்கிறது.

எனவே, இரு கேள்விகளுக்கும் திருப்திகரமான பதில் இல்லைதான். மூன்றாவதாக ஒரு கேள்வி, சிந்தனையாளர் உள்ளத்தில் எழும். காந்தி பிறந்த நாட்டில் ஏன் இந்த நிலை? ஏன் இத்தனை வன்முறை? இதற்குப் பதில் கிடைக்குமானால் முதல் இரண்டு கேள்விகளுக்குப் பதில் தேவை இல்லாமலே போகும்! மூன்றாவது கேள்விக்கு என்ன பதில்?

காந்தி வலியுறுத்தியவை முக்கியமான இரண்டு: "சத்யமேவ ஜயதே" என்றார். "அஹிம்சா பரமோ தர்ம:" என்றார். நமது அரசியல்வாதிகள் சத்தியத்தைக் கைவிட்டார்கள். அதிகார துஷ்பிரயோகம், லஞ்ச ஊழல், கறுப்புப் பணம், பொய்யான வாக்குறுதிகள், ஏமாற்று வேலை என்று அட்டகாசம் செய்தார்கள். இதைப் பார்த்துக் கொண்டே இருந்த மக்களில் பலர் காந்தியின் முதல் கொள்கையோடு இரண்டாவது கொள்கையையும் குழி தோண்டிப் புதைத்துவிடத் தீர்மானித்தார்கள்! மதச்சார்பின்மை என்ற பெயரில் ஆட்சியாளர்கள் மதங்களைப் புறக்கணிக்கத் துணிந்ததானது மக்கள் சுலபமாக அறங்களை மறக்கத் துணை செய்தது. திரைப்படங்களில் வன்முறை முதலில் புகுந்து, பிறகு மக்களின் உள்ளங்களுக்குத் தாவியது.

இந்நிலை மாற வேண்டும், வன்முறை நாட்டிலிருந்து அறவே ஒழிய வேண்டும் என்றால் அஸ்திவாரத்திலிருந்து தொடங்க வேண்டும். காந்தியின் முதல் கொள்கை இல்லாது இரண்டாவது கொள்கை வெற்றி பெறாது என்பதைத் தலைவர்கள் உணர வேண்டும். அரசியல்வாதிகளிடம் மறு சிந்தனையும் ஆத்ம பரிசோதனையும் அவசரமாக ஆரம்பமாக வேண்டும். புதுதில்லி நிகழ்ச்சி அளித்த அதிர்ச்சியினால் இந்த நன்மை விளையுமானால் நல்லது. ஆனால் அது நடக்குமா? நாம் கண்டு மகிழ்வோமா? சந்தேகம்தான்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# கட்சிக்காரர்கள் பிடுங்கிய காமிரா!

## —ராஜபாளையத்தில் ரகினா

• ஸாரி, அவசரத்தில் கொஞ்சம் அவுட் ஆஃப் போகஸ்!



**வே**றெந்த மாவட்டத்திலும் கிடைக்காத ஒரு புது அனுபவம் எங்களுக்கு காமராஜர் மாவட்டத்தில் கிடைத்தது. போலீஸ் ஸ்டேஷன் பெஞ்சில் திருவிழாவில் தொலைந்த குழந்தைகள் போல் நான்கு மணி நேரம் உட்காரும் பாக்கியம் எத்தனை பேருக்குக் கிடைத்து விடும்?

"ஸ்டேஷனுக்குப் போகிற அளவுக்கு என்னய்யா தப்பு செய்தீர்கள்?" என்று கேட்கிறீர்கள், இல்லே? அந்தக் கதையைப் பற்றிச் சொல்லு முன்...

ராஜபாளையம், காமராஜர் மாவட்டத்தில், மிகப் பெரிய நகரம். இந்நகராட்சி எல்லைக்குள் நெடுஞ்சாலையினரின் மேற்பார்வையில் கிட்டத்தட்ட 12 கிலோ மீட்டர் சாலை இருக்கிறது. இங்கேதான் தகராறு ஆரம்பம்.

தனுஷ்கோடி, தனுஷ்கோடி என்று ஓர் அ. தி. மு. க. எக்ஸ் எம். எல். ஏ. நகரிலுள்ள ஊராட்சி ஒன்றியக் கட்டடத்திற்குக் கிழக்கே இவருக்குச் சொந்தமாக, ஓர் இரு மாடிக் கட்டடம். இக்கட்டடம் முற்றிலும் நெடுஞ்சாலைப் புறம்போக்கு — பாட்டையில் சட்டத்திற்குப் புறம்பாகக் கட்டப்பட்டிருக்கிறது. ஆரம்பத்தில் அது அ. தி. மு. க. வின் சேவாஸ்தலம் என்று சொல்லப்பட்டுக் கட்டப்பட்டாலும், பிறகு அக்கட்டடம் அந்த எக்ஸ் எம். எல். ஏ. பெயருக்கே மாற்றப்பட்டு விட்டது என்று எங்களுக்கு ஒரு கடிதம் வந்திருந்தது.

மேற்சொன்ன விஷயம் உண்மைதானு என்று யாரையோ போய் விசாரிப்பதை விட தனுஷ்கோடியையே நேரில் விசாரிக்கலாம் என்று தீர்மானித்தோம். கட்டடத்திற்குச் சற்றுத் தள்ளிக் காரை நிறுத்தினேம். அந்த வரிசையில் மற்ற வீடுகள் உள்வாங்கியிருக்க இந்தக் கட்டடம் மட்டும் சற்று நெடுஞ்சாலைக்கு நெருக்கமாய் நிமிர்ந்திருந்தது. மெலிதான தூறல். வானத்தைத் திரைபோட்ட மேகங்கள்.

"எக்ஸ் (தனுஷ்கோடியை அப்படித்தான் அழைக்கிருர்கள்) இப்போ இல்லீங்க... விருது நகர் போயிருக்காரு..." சந்தேகமான முகங்கள் சூழ்ந்து கொண்டன.

"வேறு யாரு பொறுப்பா பதில் சொல்வாங்க?"

"நீங்க யாரு?"

"பத்திரிகைக்காரங்க." — 'மாதம் ஒரு மாவட்டம்' பற்றிச் சொன்னேம்.

"என்ன கேக்கணும்?"

"இந்த பில்டிங் ஹைவேஸ் எல்லைக்குள்ள வந்திருக்கிறதாச் சொல்றாங்களே..."

"எவன் எழுதினன்? அய்யாத்துரை, நீ சொல்லுய்யா..."

அய்யாத்துரை முதல் வார்டு கவுன்ஸிலர். "அதெல்லாம் பொய்யிங்க... எங்களுக்கு பக்காவாப் பட்டாவே இருக்குது. மத்தபடி எதுவும் எக்ஸ்தான் சொல்லணும். நாங்க ஒண்ணும் சொல்ல முடியாது..." என்று அவர் வார்த்தையை முடிக்கு முன் சாலையிலிருந்து "டேய்... டேய்..." என்று நான்கைந்து குரல்கள். தபதபவென்று கால்கள் ஓடும் சப்தம்.

அவசரமாய் வெளியே வந்து பார்த்தால் நிலைமையின் தீவிரம் புரிந்தது. எங்களுடன் வந்த போட்டோகிராபர் அந்தக் கட்டடத்தைக் காமிராவால் ஃபோகஸ் செய்து கொண்டிருந்திருக்கிருர். அவ்வளவுதான். அவரைத் துரத்திச் சென்று, காமிராவைப் பிடுங்கிக் கொண்டு நான்கு பேர் வெற்றி நடையாக வந்தார்கள்.

"இந்தக் காமிராவைத் தூக்கி உள்ளே போடுய்யா..." ராணுவத்தையே தலைமை தாங்குவது போல் ஒரு மதர்ப்பு அந்தக் கட்சிக்காரருக்கு.

"இதுவே வேற பத்திரிகையா இருந்திருந்தா சட்டையைக் கிழிச்சி நாலு உதை கொடுத்திருப்போம். பேசாம போங்க... எக்ஸ் கிட்டப் போய்ச் சொல்லுங்க... அவர் திருப்பித் தரச் சொன்ஞ காமிராவைத் தர்ரேம்..."

"சரி வாங்க, பக்கத்து ஸ்டுடியோவுக்குப் போவோம்... ஃபிலிமை டெவலப் செய்து பார்ப்போம்... உங்க பில்டிங் விழுந்திருந்தா அந்த நெகடிவை நீங்களே கட் பண்ணிக்குங்க..." இரண்டாயிரம், மூவாயிரம் என்று விலை கொடுத்து வாங்கிய காமிரா, போட்டோகிராபரைத் தணிந்து போக வைத்தது.

"அதெல்லாம் நாங்க எங்கேயும் வர மாட்டோம். நீங்க பாட்டுக்கு போட்டோ எடுத்

திட்டுப் போவீங்க... நாங்க பாத்துக்கிட்டு நின்னு எக்ஸ் எங்களேயில்ல செருப்பால அடிப்பாரு?'' கட்சிக்காரர்களுக்கு தனுஷ்கோடியிடம் பயம் கலந்த விசுவாசம்.

''காமிராவுக்குள் இருக்கும் ஃபிலிம்ரோலே உருவிக் கொடுத்துவிடுகிறோம்; 'காமிராவைத் தந்துவிடுங்கள்'' என்ற யோசனைக்கும் அவர்கள் மசியவில்லை.

''சரி, அட்லீஸ்ட் காமிராவை வாங்கிக்கிட்டோம்னு ஒரு ரசீதாவது கொடுங்க!''

''ரசீதெல்லாம் தர முடியாது. எங்க போய் கம்ப்ளெயின்ட் பண்ணணுமோ, பண்ணிக்குங்க... போலீஸ்கிட்ட வேணலும் போய்க்குங்க... எங்களுக்குக் கவலேயில்ல...''

விருதுநகரில் அமைச்சர் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரனின் வீட்டிற்குத்தான் தனுஷ்கோடி போயிருந்தார் என்பதால், மினிஸ்டர் வீட்டுக்கே போன் போட்டு நிலேமையை விளக்க முடிவு செய்தோம். அமைச்சர் ஏதோ மீட்டிங்குக்காகச் சாத்தூர் போய் விட்டதாக அவருடைய பி. ஏ. பாண்டியன் சொன்னர். தனுஷ்கோடியும் அங்கே இல்லே.

அடுத்து என்ன செய்வது? நேரே ராஜபாளேயம் போலீஸ் ஸ்டேஷன். அறிமுகங்கள்.

''பின்னே, நீங்க ஏன் ஸார் போட்டோல்லாம் எடுக்கறீங்க?'' என்ருர் சப்—இன்ஸ்பெக்டர். ''சரி, காமிராவை மீட்டுத் தந்தாப் போதுமா, இல்ல, அவங்க பேர்ல நடவடிக்கை எடுக்கணுமா?''

அந்த நேரத்தில் சர்க்கிள் இன்ஸ்பெக்டரே வந்து சேர்ந்தார். நிலேமையை விளக்கினேம்.

''என் ரூம்ல உக்காருங்க, சார் — காமிராவைத் திருப்பி வாங்க ஏற்பாடு செய்யறேன்...''

உடனே கட்சி அலுவலகத்திற்குப் போய் காமிராவை மீட்டு வரும்படி எஸ். ஐ. அனுப்பப்பட்டார். இன்ஸ்பெக்டர் தருவித்த டீயை உறிஞ்சிக் கொண்டு, பொன்னன நேரம் வீணவதை நினைத்து எங்களேயே நொந்து கொண்டு காத்திருக்க ஆரம்பித்தோம். கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்திற்கு மேல் எந்தத் தகவலும் இல்லே.



''நீங்க லஞ்சம் வாங்கறீங்கன்னு மேலிடத்தில் புகார் செஞ்சுடுவேன்!''

''மேலே போனுக்க என்னைவிட இரண்டு மடங்கு லஞ்சம் கொடுக்க வேண்டி வரும்; நல்லா யோசிச்சு முடிவு செய்யுங்க!''

— நா. நாகா

கம்ப்யூட்டர் இந்தியாவுக்கு.....

தீமையே விளைவிக்கும்;
நன்மையே செய்யும்.

வாசகர் பட்டிமன்றம்
— அடுத்த இதழில்.

அப்புறம் சப் — இன்ஸ்பெக்டர் விரித்த கைகளோடு வந்து சேர்ந்தார்.

''ஆபீஸைப் பூட்டிக்கிட்டு அத்தனே பேரும் எங்கேயோ ஓடிப் போயிட்டாங்க சார். அய்யாத்துரை வீட்டுக்குப் போனேன். காலேயே விருதுநகர் போய்ட்டாராம். எங்கேயோ அலேந்து திரிந்து வேறொரு அ.தி.மு. க. ஆசாமியைப் பிடித்து வந்திருந்தார் எஸ். ஐ. அவர் தமக்கு ஏதும் தெரியாது என்ருர். அய்யாத்துரை எங்கே இருக்கக் கூடும் என்று சில அனுமானங்களைச் சொன்னர்.

நேரம் ஊர்ந்தது. வாடகைக் கார் பணத்தைச் சாப்பிட்டுக் கொண்டு வீணகக் காத்திருந்தது. போலீஸ் அதிகாரிகள் உண்மையிலேயே எங்கள் நிலேமை குறித்துப் பதற்றப் பட்டார்கள். எப்படியாவது காமிராவை மீட்டுத் தந்துவிட வேண்டும் என்று மும்முரமானர்கள். போன்கள் பறந்தன. ஆட்கள் வேட்டைக்குக் கிளம்பினர்கள். அடுத்த இரண்டு மணி நேரத்தின் பலனும் பூஜ்யம்!

இன்னெரு டீ. ''கொஞ்சம் வெயிட் பண்ணுங்க சார்... கண்டுபிடிச்சிடலாம்...''

காமிரா பறிக்கப்பட்டது மாலே ஐந்து மணி அளவில். இரவு எட்டே முக்கால் ஆகிவிட்டது. சரி, காமிரா இல்லாமல் திரும்ப வேண்டியதுதான் என்று நாங்கள் முடிவு செய்த நேரம், போலீஸ் ஸ்டேஷனுக்கு ஒரு போன் வந்தது. மறுமுனேயில் தனுஷ்கோடி.

போனில், ''சரிங்கய்யா... சரிங்கய்யா...'' இன்ஸ்பெக்டரின் முகத்தில் மலர்ச்சி.

''மினிஸ்டர் வீட்டுல இப்பத்தான் விவரம் சொன்னங்களாம். ஆளுங்களைக் கூப்பிட்டு உடனே காமிராவைத் திருப்பித் தரச் சொல்லிட்டாராம்.... வந்திடும்... உக்காருங்க...''

ஹப்பா! நமது போட்டோகிராபர் கண்களில் நிம்மதி கலந்த ஒரு விடுதலேயுணர்வு. எட்டே முக்காலுக்கு போன் வந்தாலும், கடைசி கடைசியாகக் காமிரா வந்து சேர்ந்த போது மணி 9.30.

கவுன்ஸிலர் அய்யாத்துரை, சூடாகிவிட்ட மற்ற கட்சிக்காரர்களுக்கு மத்தியில் தன்னல் எதுவும் செய்ய முடியவில்லே என்ற ரீதியில் சால்ஜாப்பு சொல்லிக் காமிராவைத் திருப்பினர்.

''இந்த மாதிரில்லாம் செய்யக் கூடாதுய்யா... போ...'' என்ருர் இன்ஸ்பெக்டர், அவரிடம்.

போலீஸ் அதிகாரிகளுக்கு நன்றி சொல்லிப் புறப்பட்டோம்.

ஐந்து மணியிலிருந்து ஒன்பதரை மணி வரையில் நான்கரை மணி நேரம் எங்களே போலீஸ் ஸ்டேஷனில் கட்டிப் போட்ட அந்த ஹீரோ கட்டடம் (முந்திய பக்கம்) இதுதான். (போட்டோகிராபரால் மறுபடியும் படம் எடுக்க முடியாதா என்ன?)

படுக்கை துணிமணிகளில் உன்னதம்



பாலிகாட—
சுருக்கம் விழாத
பாலியெஸ்டர் கலந்த டீலக்ஸ் விரிப்புகள்
பியூகேல் மற்றும் சூபர்கேல் —
ஆடம்பரமான அசல் பருத்தியினாலான
விரிப்புகள்.

பாம்பே டையிங்

BD/168/TAM

# கைபடாத சேவரிட் சேமியா
# மணக்குமே உங்கள் கைபட்டதும் !






சேவரிட் சேமியா மிக நவீனமான அயல் நாட்டு இயந்திரங்களால் மிகச் சுகாதாரமான முறையில் கைபடாமல் தயாரிக்கப்படுகிறது.

உயர்தர சம்பா கோதுமை ரவையில் தயாரிக்கப்படும் சேவரிட் சேமியா சத்து நிறைந்தது. குழைந்து போகாதது. சீக்கிரமாகச் சமைக்கக் கூடியது. மேலும், சேவரிட் சேமியாவை வறுக்க வேண்டிய அவசியமில்லை. இது சமைத்த பின்பும் பால்போல் வெண்மையாக இருக்கும்!

சிற்றுண்டிகளானாலும், பாயசம் போன்ற விசேஷ உணவு வகைகளானாலும் சேவரிட் சேமியா உங்கள் சமையலுக்கு ஊட்டமும் சுவையும் கூட்டுகிறது!

ஆகையினால்தான் குடும்பநலன் கருதும் குடும்பத் தலைவிகள் விரும்பி வாங்குவது சேவரிட் சேமியாவே!




Sista's - UIM.482.65.TM.A

**முத்தான அம்மா சமைப்பது**
**சத்தான சேவரிட் சேமியா !**

**Savorit**
**சேமியா**

# பால்ய விவாகம் படுத்தும் பாடு!



• "எனக்கு எவ்வளவு வயசுன்னு தெரியாதுங்க..."

"ஐயா வாங்க.... இந்த சுப்பம்மாக் கெளவியைப் பார்க்கப் பட்டணத்லேர்ந்துசிலித்தூருக்கு(ஸ்ரீவில்லிபுத்தூர்)வந்திங்களா?

"என்ன கேக்கறீங்க? வீட்டுக்காரரர் பேரா? எப்படிச் சொல்றது. கணேசு, நீ சொல்லு. கேட்டுக்கிட்டீங்களா?

"எப்பக் கல்யாணம் ஆச்சின்னு கேக்கறீங்க? எனக்கு ஒம்பது வயசுல கல்யாணம் நடந்தது. வீட்டுக்காரரு மிலிட்டிரியில இருந்தாரு. கல்யாணமான மூன்றரை வருஷத்தில அவரு போய்ட்டாரு. பன்னண்ட்ரை வயசுல அறுத்துப் போட்டது.

"எனக்குப் பெஞ்சன் எல்லாம் எதுவும் வரலே ராசா. சின்ன வயசுலேயே கல்யாணம் முடிஞ்சுப் போச்சா. ஊட்டுக்காரிக்கு ஒம்போது வயசுன்னு சொல்லக் கூடாதாமில்ல? அது தப்பாமே! அதனால எங்க ஊட்டுக்காரரு, மிலிட்டரியில கல்யாணமானதாவே சொல்லிக்கலே. எங்க மாமியார் பேரைக் கொடுத்துட்டாரு. அதனல பெஞ்சன், கிஞ்சன் தந்தி, கிந்தி எல்லாமே அவ பேருக்குத்தான் வரும்.

"நான் தனியாத்தான் இருக்கேன் ராசா. இருவது வருஷத்துக்கு முன்னால மாமியார் போயாச்சு. பெஞ்சனும் போச்சு. எம் மாமியார் வாங்கிக்கிட்டிருந்த பெஞ்சன் எட்டு ரூவா. அவ இருக்கற வரைக்கும் நான் அங்கதான் வீட்டு வேலையெல்லாம் செய்ஞ்சுகிட்டு இருந்தேன். அப்புறந்தான் இந்தக் குடிசைக்கு வந்தேன்.

"எனக்குப் புள்ளே குட்டி இல்லே. கொளுந்தன்தான் ஒருத்தன் இருக்கான், ராசபாளேயத்தில. தம்பி இருக்கான். எங்க இருக்கான்; என்ன வேலே செய்யருன்னே தெரியலே. ஒருத்தரும் ஒரு ஒதவியும் செய்யலே.

"வயசான அனாதைன்னு முப்பத்தஞ்சு ரூவா கொடுக்கறுங்க, கெவர்மென்ட்ல. தபால்காரருக்கு ஓர் ரூவா; குடிசை வாடகை பதினறு ரூவா போக, பதினெட்டு ரூவாய்ல பொளப்பு நடத்தறேன். வயசானவங்கறதால மத்தியானம் ஒருவேளே கெவர்மென்ட்ல சாப்பாடு போடறுங்க. வாரத்துக்கு அரை கிலோ அரிசி கொடுக்கறுங்க....

"என்ன வயசாகுதுன்னு கேக்கறீங்க? எனக்குத் தெரியலே ராசா! அவரு செத்தே அம்பது வருஷம் ஆகப் போகுது. என் ராசா இல்லாம, நான் இங்க கெடந்து அல்லாடறேன். சாப்பாட்டுக்கு வளியில்லாம, யார் யாரையோ எதிர்பார்த்துக்கிட்டு... என் ராசா என்னேயும் அளேச்சுக்கிட்டுப் போயிருக்கக் கூடாதா? என் ராசா என்னேயும் அளேச்சிக்கிட்டுப் போயிருக்கக் கூடாதா? என் ராசா....."

எனக்குச் சுதந்திரம் வேண்டும். சுவாசிக்க, கவிதை எழுத, அதை ரசித்துப் பார்க்க... நான் சின்னப் பையன்தான். ஆனால் சிந்திக்க வேண்டும் என்கிற ஆசை நிறைய இருக்கிறது. நிறைய. தோட்டத்தில் சோம்பல் முறித்துக் கொண்டே கொய்யா மரத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போது, அணில் வந்து நான் பறிப்பதற்காக வைத்திருந்த கொய்யாவைக் கடித்தது. நான் 'மியாவ்' என்று பூனை போலக் கத்தியதும் சுற்றுமுற்றும் பார்த்துப் பயந்து போய் மேல் கிளைக்கு ஓடிவிட்டது.

"இங்கே என்ன பண்றே?" — அப்பாவின் குரல் கேட்டதும் முடிகள் எல்லாம் சிலிர்த்துக் கொண்டன.

"செடிகளுக்குத் தண்ணீர் ஊத்திட்டியா?" — குரல் எப்போதும் போலக் கடுமையாக இருந்தது.

"இல்லை!" — நான்.

"Go at once. Lazy fellow" — கத்தினார்.

பக்கெட்டைத் தூக்கிக் கொண்டு ஓடினேன். அப்பாவை எனக்குப் பிடிக்காது. பல்லவனில் செக்யூரிட்டி ஆபீஸர். கண்டிப்பு கூடவே ஒட்டிக் கொண்டு பிறந்திருந்தது. முரட்டு மீசை. 'ஜியா — உல் — ஹக்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொள்வேன். ஓடிக் கொண்டேயிருக்க வேண்டும். சொல்கிறதைச் செய்தாக வேண்டும். நமக்குப் பிடிக்காவிட்டால் கூட.. இல்லாவிட்டால் அடி விழும். சின்ன வயசிலிருந்தே இப்படித்தான். இப்போது நான் ப்ளஸ் டு எழுதியிருக்கிறேன். அப்பாவைப் பழி வாங்க வேண்டும் என்கிற ஆசை நிறைய இருக்கிறது. என் ஆசை, அபிலாஷைகளைக் குழி தோண்டிப் புதைத்து விட்டார். ஒரு முறை என் கவிதை நோட்டுப் புத்தகத்தைக் கிழித்து நெருப்பில் போட்டு விட்டார். என் அப்பாவை நான் பழி வாங்கவேண்டும். கண்டிப்பாக.



அம்மா சரியான நாட்டுப் புறம். எனக்கு எப்போதாவது சப்போர்ட்டுக்கு வந்தால், அப்பாவிடம் இருந்து "Country Brute" உனக்கென்ன தெரியும்? வாயை மூடிக்கிட்டு இரு!' என்று திட்டு வாங்கிக் கொள்வாள். என் மீது அவளுக்கு நிறையப் பாசம். என்னைச் சின்ன வயதில் மடிமீது சாய்த்துக் கொண்டு தலைமுடியைச் செல்லமாக வருடுவாள். குஷியாக இருக்கும். எனக்குக் கிரிக்கெட் மட்டையெல்லாம் வாங்கித் தந்தாள். ஆனால் ஜியா அதைத் தூக்கிப் பரண் மீது எங்கோ போட்டு விட்டார், நான் எடுக்க முடியாதபடி. விளையாடினால் படிப்பில் கவனம் போகாதாம்.

பத்தாவது படிக்கும் போது மார்க் குறைவாக வாங்கிவிட்டேன் என்று என்னைக்கண் மூடித்தனமாக அடித்தபோது, எனக்குள் ஒரு வக்கிரம் முதன்முறையாக வளர்ந்தது. அம்மா எவ்வளவோ தடுத்தாள். அதற்கு அவர் சொன்னார்: ''பசங்களை அடிச்சுதான் வளர்க்கணும்! இல்லாட்டி உருப்பட மாட்டாங்க. என்னை எங்கப்பா அப்படித்தான் வளர்த்தார்.'' எனக்குத் தாத்தா மீது கோபம் கோபமாய் வந்தது. அவர் உயிரோடு இல்லை.



பிளஸ்டூவில் ஒழுங்காப் படிச்சு மார்க் எடுக்கலே, தொலைச்சுடுவேன். ஒனக்கு இங்கே சோறு போடறதே தப்பு. வெளியே தொரத்திடுவேன். **Be careful.**''

மனத்துக்குள் லேசாக பயமெடுக்கும். முடிகள் எல்லாம் சிலிர்க்கும். ஆனால் திடீரென்று அத்தி பூத்தது போல என்னிடம் வந்து சொல்வார்: ''ஒன்னோட நன்மைக்காகத்தான் சொல்றேன், நீ நிறைய மார்க் வாங்கினால்தான் டாக்டர்ராக முடியும்.''

கொஞ்ச நேரம்தான். உடனே பேச்சு ஜியா பாணியில் மாறும். "**You should become a Doctor.** உனக்கு வேற வழியில்லை. உன் மனசில வேற ஏதாவது இருந்தா அதை இப்பவே தொலைச்சுடு. கருணையையெல்லாம் எங்கிட்ட எதிர்பார்க்காதே. எதையும் நான் காட்டத் தயாராக இல்லை.''

எனக்கு ஒன்று மட்டும் புரிகிறது. என் எதிர்காலத்துக்காக என்று சொல்வதெல்லாம் பொய். இவருடைய கௌரவத்துக்காக, மதிப்புக்காக, அந்தஸ்துக்காக மட்டும் நான் படித்தாக வேண்டும். எனக்கென்று தனிப்பட்ட ஆசைகள் இருக்கக் கூடாது. அதற்கு அனுமதியில்லை. மீறிப் போனால் பெல்ட்டை உபயோகிப்பார்.

எக்ஸாம் டைமில் லீவ் போட்டு விட்டுக் கழுகு மாதிரி சுற்றிச் சுற்றி வந்தார்.

"**Get up. Don't be lazy**" — மூன்று மணிக்கு விடியற்காலையில் முதுகில் பலமாக அறை விழும். முடிகள் சிலிர்க்கும்.

"**Come on, study**" — என்றால் படிக்க முடியவில்லை. நிஜமாக. என்றால் படிக்க முடியாது. ஒரு தகப்பனின் கடமைகள் இவ்வளவுதான் என்றால் நான் படிக்க மாட்டேன்.

எக்ஸாம் முடிந்து, பெங்களூரிலுள்ள மாமா வீட்டிற்குப் போவதற்காக பர்மிஷன் கேட்டேன்.

''ஊருக்கா? **Nonsense.** ஏற்கெனவே நிறைய டைம் வேஸ்ட் பண்ணியிருக்கே. ஷார்ட் ஹேண்ட் கிளாஸ் போகணும். ஊருக்குப் போய் ஜாலியா டைம் வேஸ்ட் பண்ணலாம்னு பாக்கறியா? நீ என் கண் முன்னாலதான் இருக்கணும். உன் படிப்பு முடிகிறவரை தனிப்பட்ட ஆசையெல்லாம் வச்சுக்கக் கூடாதுன்னு எத்தனை முறை சொல்லியிருக்கேன். புத்தரே சொல்லியிருக்கார், ஆசை கூடாதுன்னு. படிச்சதில்லை?''

புத்தரை மனத்தில் கெட்ட வார்த்தையால் திட்டினேன். அது தப்பு என்று தெரிந்தது.

அம்மாவையும் சொந்த ஊருக்கு அனுப்ப மாட்டார். 'அந்த நரகத்துக்குப் போய் என்ன பண்ணப் போற? போறதாயிருந்தா திரும்பி வராதே!' அம்மா அடங்கிப்

# இதோ!
# இன்ட்டர்நேஷனல் டூரிஸ்ட்டர்

## பிஞ்சமுடியாதது தகர்க்க முடியாதது ஈடு இணையற்றது



இன்ட்டர்நேஷனல் டூரிஸ்ட்டர்.
நீங்கள் நாடிடும் பெருமைகள் அனைத்தும் அடங்கி
மவுல்டெட் லக்கேஜ். நீடித்த உழைப்பு, ஸ்டை
வனப்பு, பணத்திற்குப் பெருமதிப்பு.

திகைப்பூட்டும் வகைவாரிகள்—விலை
ரூ. 200 முதல். மனமயக்கும் விதவித
சைஸ்கள், வர்ணங்கள், டிசைன்க
இன்ட்டர்நேஷனல் டூரிஸ்ட்டர்
ஒவ்வொன்றும் சாகசம் புரிக்கு
திக்விஜய வாழ்வுக்கேற்ப
திடம்படக் கட்டமைந்தது.

தரமான சூட்கேஸ் விற்கப்படு
எவ்விடத்திலும் கிடைக்குது
தட்டிக்கொண்டு போங்கள்
பெட்டி வடிவிலே ஒரு
'சூறாவளி'.



INTERNATIONAL
TOURISTER

மகிழ்ச்சித் துள்ளல் இதன் விலையே மாபெரும் "த்ரில்"

ி.ஐ.பி. யின் தரமான தயாரிப்பு

போவாள். இவரும் கிராமத்திலிருந்தவர் தான். அம்மாவை ஏன் கட்டிக் கொண்டார்? தாத்தாவிடம் இருந்து நிறையப் பணம் வாங்கிக் கொண்டிருக்கலாம்.

பிளஸ் டூ மார்க் வந்தது. ஒரு சப்ஜெக்டில் மார்க் ரொம்பக் குறைந்து விட்டிருந்தது. அம்மாவிடம் மார்க் ஷீட்டைக் கொடுத்துவிட்டு மொட்டை மாடிக்குப்போய் விட்டேன். அப்பா சாயந்திரம் வீட்டிற்கு வந்தார். கொஞ்ச நேரம் கழித்துப் படிகள் அதிர மேலே வந்தார். கையில் பெல்ட் இருந்தது.

''ராஸ்கல். எத்தனை முறை சொன்னேன். ஒழுங்காகப் படிடான்னு.''

— பெல்ட் காத்திருக்காமல் கடமையைச் செய்தது.

''அப்பா! வேணாம்பா. வலியில் கத்தினேன். தடுத்த அம்மாவின் மேலும் அடி விழவே எனக்குக் கோபம் வந்துவிட்டது. ஆத்திரத்துடன் பெல்ட்டை அவர் கையிலிருந்து பிடுங்கித் தூக்கியெறிந்தேன். அப்பா கொஞ்சம் கலங்கி விட்டார்!

''உன்னை அப்புறம் கவனிச்சுக்கறேன்!'' — கீழே போய்விட்டார்.

அம்மா நிறைய அழுதாள். எனக்கும் அழுகை வந்தது. ஆத்திரமும் வந்தது. நைட் ஆக ஆக ஆத்திரம் அதிகரித்தது. ஏதாவது செய்தாக வேண்டும். வெள்ளைப் பேப்பரில் என்ன எழுதினேன் என்று எனக்கே தெரியவில்லை. அதைத் திரும்பப் படிக்கவும் விருப்பமில்லை. கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேர்த்து வைத்தது நூறு ரூபாய் இருந்தது. அம்மாவின் பழைய சூட்கேஸை எடுத்துக் கொண்டேன். கிளம்பும் போது கொஞ்சம் பயமாக இருந்தது. அப்பா எங்கே எழுந்து விடுவாரோ என்று. பக்கத்து ரூமில் கம்பீரமான குறட்டைச் சத்தம் கேட்டது. முடிகள் லேசாகச் சிலிர்த்தன. அம்மாவின் முகத்தைப் பார்த்த பொழுது கண்களில் கண்ணீர். அதில் ரெண்டு சொட்டு அவள்மேல் விழுந்திருக்க வேண்டும். புரண்டு அந்தப் பக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டாள். போகும் போது அவள் முகத்தைப் பார்க்கக் கூடாது என்று திரும்பிக் கொண்டாளோ! கடிதத்தை அவள் பக்கத்தில் வைத்துவிட்டு, கால்களை லேசாகத் தொட்டு முத்தமிட்டேன். வெளியே வந்த போது நிசப்தமாக இருந்தது.

ஸ்டேஷனில்பெருமூச்சுவிட்டுக்கொண்டு ஒரு டிரெயின் நின்று கொண்டிருந்தது. டிரெயினில் நன்றாகத் தூங்கிவிட்டிருக்கிறேன். யாரோ எழுப்பினார்கள். எந்த ஊருப்பா? டிரெயின் ஏதோ ஒரு ஸ்டேஷனில் நின்றிருந்தது. இறங்கிக் கொண்டேன்.

உலகம் எனக்கு முன்னால் பரந்து விரிந்திருந்தது. மேகங்கள் எல்லாம் என்னோடு கைகுலுக்குகிறாற்போல இருந்தது.

டிரெயின் என்னைத் தனியாக விட்டு விட்டுப் போய்விட்டது. ஆனால் நான் மட்டும் சுதந்திரமாய், சுவாசித்துக் கொண்டு...

# எம்.ஜி.ஆர் பதவி விலக வேண்டுமா?

## வாசகர் பட்டி மன்றம் — 11

## பரிசு ரூ 300/-



'தமது வாரிசைத் தேர்ந்தெடுத்து அவரிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து விட்டு எம். ஜி. ஆர். பதவி துறக்க வேண்டும்' என்று முக்கியமான தேசிய பத்திரிகைகள் பல எழுதிவருகின்றன. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

**தமது உடல்நிலையைக் கருத்தில் கொண்டும் தமிழ்நாட்டின் நலனை முன்னிட்டும் —**

**எம். ஜி. ஆர். பதவி விலக வேண்டும்;**

**எம். ஜி. ஆர். பதவியில் நீடிக்க வேண்டும்**

உங்களுக்கு உகந்த தலைப்பைத் தேர்ந்தெடுத்துக்கல்கியில் அரைப்பக்க அளவுக்கு மேற்படாமல் உங்கள் கருத்துக்களை எழுதி அனுப்புங்கள். இரு தரப்பிலும் இரு கட்டுரைகளுக்குப் பரிசு தலா ரூ. 100.

மற்ற கட்டுரைகளிலிருந்து இருதரப்புக்கும் பிரதிநிதித்துவம் அளித்து ஐந்து ஐந்து முக்கியக் கருத்துக்கள் மட்டும் பிரசுரமாகும். இவற்றுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 10.

எந்தக் கட்சிக்கு அதிக ஆதரவு என்பதை மதிப்பெண் உணர்த்தும்.

**முடிவு தேதி: 27.10.86**

உறையின் மேல், ''பட்டி மன்றம் — 11'' என்று கண்டிப்பாகக் குறிப்பிடவும். கீழே விலாசம் எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுவதுமாகக் கத்தரித்து உங்கள் கட்டுரையுடன் இணைக்க வேண்டும்.

பெயர்: ..........................

விலாசம்: ..........................

..........................

# The only thing Priya can do with her eyes.... is cry.

சூரியோதயத்தையோ, அம்மாவின் புன்னகையையோ, ஏன், தன் சொந்த முகத்தையோ கூடப் பார்த்த ஞாபகம் இல்லை ப்ரியாவுக்கு. இப்பொழுது அவளுக்குவாழ்க்கையில் ஒரே நிறம்தான் தெரியும் — கறுப்பு!

ப்ரியா பார்வை இழந்து பத்து வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. அவள் வளர வளர தன் இயலாமையையும், இயற்கை தனக்கு இழைத்த அநியாயத்தையும் உணர ஆரம்பித்தாள். அவளால் மற்ற குழந்தைகளுடன் சாதாரண பள்ளிக்குச் செல்ல முடியவில்லை. பிற சிறுவர்களைப் போல விளையாட முடியவில்லை; படிக்க முடியவில்லை. பூக்கள் மலர்வதை அவளால் பார்க்க முடியவில்லை. அவளுடைய உடையின் வண்ணங்களையோ, தோழர்களின் கண்களில் தோன்றிய சந்தோஷச் சிரிப்பையோ அவளால் பார்த்து மகிழ முடியவில்லை.

இப்போது அவளால் அழத்தான் முடிகிறது. அவளுடைய ஒவ்வொரு துளிக் கண்ணீரும் அவள் வாழ்க்கையின் சோகத்தை. அச்சத்தை..... தனிமையைப் பிரதிபலிக்கிறது.

ஆனால்ப்ரியா நம்பிக்கை இழக்கவேண்டிய அவசியம் கிடையாது. பல பார்வையற்றவர்களைப் போல் அவளுக்கும் கண் பார்வை கிடைத்துவிட வாய்ப்புகள் உண்டு. ஒரு எளிமையான சிறந்த நிவாரணம் இருக்கிறது. அதற்குச் செலவே கிடையாது — உங்கள் நல்லெண்ணம் மட்டும்தான் தேவை.

ஓர் எளிய கார்னியா டிரான்ஸ்பிளான்ட் அறுவைச் சிகிச்சை ப்ரியாவுக்குப் பார்வையை வரவழைத்துவிடும். உபயோகமற்ற அவளுடைய கார்னியாவிற்குப் பதில் ஒரு ஆரோக்கியமான கார்னியாவைப் பொருத்த வேண்டும். அந்த ஆரோக்கியமான கார்னியா உங்களுடையதாக இருக்கலாம்.

கண்ணை நீக்குவதால் உடலில் வடுவோ, அலங்கோலமோ ஏற்படுவதில்லை. உங்கள் கண்களைத் தானம் செய்ய தீர்மானித்துவிட்டீர்களானால், 'அவை உங்களுக்குப் பிறகும் வாழ்ந்து ஒருவருக்குப் பயன் அளிக்கும்' என்ற சந்தோஷமான நினைப்புடன் நீங்கள் வாழலாம்.

நீங்கள் உயிரோடு இருக்கும்போது பார்வை இல்லாதவர்களுக்காக அனுதாபப்பட்டால், உங்கள் மரணத்துக்குப்பின் உங்கள் கண்களை அவர்களுக்கு வழங்கிவிடத் தீர்மானியுங்கள். அவர்களுக்கு நீங்கள் தரக்கூடிய பொக்கிஷம் போன்ற பரிசு அதுதான்.

இன்று இந்தியாவிலுள்ள சுமார் 90 லட்சம் பார்வையற்றவர்களுள் 25 லட்சத்திற்கு மேற்பட்டவர்கள் கண் தானம் பெறுவதால் பார்வையையும் பெறக் கூடியவர்கள். இவர்களுக்குநீங்கள் உதவநினைத்தால் அருகிலுள்ள கண்வங்கியுடன் தொடர்பு கொள்ளலாம்:



**NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD.)**

(Eye Donation Information Centre)

1-57, North Mada Street, Po. Tirumala Hills-517504.

**Via-Tirupati**



# நெருப்பாக நீ

தன்னெதிரில் வைக்கப்பட்டிருந்த இட்லியையும், அதன் மீது உருக்கி வார்க்கப்பட்ட பசும் நெய்யையும், பக்கத்தில் தோதாக அமர்ந்திருந்த கொத்துமல்லிச் சட்னியையும் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறார் ஸ்டேஷன் மாஸ்டர்...

''ஏண்டாப்பா மாது... இட்லி மேல் ஊத்தியிருக்கானே... அது என்ன நெய்தானா, இல்லே டர்பன்டைன், பெட்ரோல் வகையறாவைச் சேர்ந்த ஆயில் ஏதாவதா...?''

''ஏஞ்சாமீ...''

''வந்ததுலேயிருந்து பார்க்கறேன்... ஏதோ ஒர்க்ஷாப்புக்குள்ளே புகுந்தா மாதிரி, இந்த வாடை அடிக்குதே... அதான் கேட்கிறேன்...''

''வீட்டுல பெயிண்ட் அடிக்கறாங்க... அதான்... நீங்க சாப்பிடுங்க...''

ஸ்டேஷன் மாஸ்டர், இட்லியை விண்டு வாயில் போட்டவாறு, மாதையனிடமும் துருவ ஆரம்பிக்கிறார்.

''திடீர்னு ஏன் மயக்கம், கிறுகிறுப்பு எல்லாம் வந்துடுத்து சின்ன எசமானிக்கு...? எண்ணெய்ப் பண்டம் ஏதாவது நிறைய சாப்பிட்டுட்டாங்களோ...?''

''ஐயோ, அதெல்லாம் மூச்சு விடக் கூடாதுங்க... டாக்டரய்யா சொன்ன அளவுக்கு மேல, ஒரு இட்லி கூட அதிகமாப் போட்டுக்க மாட்டாங்க அம்மா...''

''அதுசரி... அதுக்குன்னு ரொம்பவும் கறாரா ரெண்டு இட்லிக்கு மேல் கூடாதுன்னு பத்தியமெல்லாம் இருக்கக் கூடாது. டாக்டரய்யா மொண்டிப் பிடிவாதமா, ஆகாரமே கூடாதுன்னுதான் சொல்லுவார்... 'சரிதான் சரிதான்'னு தலையை ஆட்டிட்டு — கொஞ்சம் அப்படியிப்படி உள்ளே தள்ள வேண்டியதுதான்... பட்டினி கிடக்கிறது அவரா, நாமா... எங்கே, இன்னும் நாலு இட்லி கொண்டு வரச் சொல்லு...''

''இதோங்க... தவசிப் பிள்ளை... அன்னம்மா கிட்ட, இன்னும் நாலு இட்லி கொண்டாரச் சொல்லுங்க...''

''அப்படியே நெய்யும் கொடுத்தனுப்பச் சொல்லு... அதுக்கு வேறே ஒரு நடை நடப்பா அன்னம்மா...''

அன்னம்மா வந்து போகும்வரை காத்திருந்த மனிதர், மாதையனைப் பார்த்து அகலப் புன்னகை புரிகிறார்.

''ஒரு வேளை, ஜமீன்தாருக்கும் அம்மாவுக்கும் ஏதாவது தகராறு ஏற்பட்டு, ரத்தக் கொதிப்பு அதிகமாகி, தலைசுத்தி விழுந்திருப்பாங்களோ...?''

''எங்கே... அம்மாதான் பேசறதே இல்லீங்களே... ரெண்டு கையையும் தட்டினாத்தானே ஓசை?''

''ஓஹோ... அதை மறந்தே போயிட்டேனே நான்... ஜமீன்தார் இந்த ஒரு விஷயத்துல அதிர்ஷ்டம் செஞ்சிருக்கார்... 'பேசாத பெண்டாட்டி'ங்கறது பூலோகத்துல எல்லாருக்கும்

கிடைக்கக்கூடியதா...? அப்ப, வேறே என்ன காரணம்...?''

ஸ்டேஷன் மாஸ்டர், மாதையனை அருகில் அழைத்து, காதோடு கேட்கிறார்.

''மசக்கையா இருக்குமோ...?''

மாதையன் முறைக்கிறான்... அவரோ சிரிக்கிறார்...

''ஹப்பா... சட்னி நல்ல காரம். தப்பித் தவறிக் கூட ஜமீன்தார் சம்சாரத்துக் கிட்ட காமிச்சுடாதே... இந்தக் காரம் நாக்கை விட்டுப் பிரியறதுக்குள்ளே சூடா காப்பி குடிச்சா பரவாயில்லே...''

''இதோ சொல்றேங்க...''

''இங்கேயிருந்தே ஏன் கத்தறே... உள்ளே போய்தான் சொல்லேன்...''

இங்கேதான் மாதையன் தவறு செய்கிறான்.

''என்னை ஹால்லயே இருக்கச் சொல்லி, எசமான் உத்தரவுங்க...''

இது அவசியமா... இத்தனை நேரமும் நின்ற மாதிரி இவன் தெய்வமே என்று நின்றிருக்கக் கூடாதோ...?

என்ன பேசுகிறோம் என்பதே புரியாமல் அவன் பேசிய வார்த்தைகள், ஸ்டேஷன் மாஸ்டரின் கழுகு மூக்கை வியர்க்க வைக்க...

அவர், அந்தக் கல்யாணக் கூடத்தில் மாட்டியிருந்த ஜமீன்தாரின் மூதாதையரின் ஓவியங்களைப் பார்க்கும் சாக்கில், மெள்ள நழுவுகிறார்...

''ஐயா... உட்காருங்க... ஜமீன்தார் இப்ப வந்துடுவாரு...''

''அட, இருக்கட்டும்டா... எட்டு இட்லி ஜீரணமாக வேண்டாமா... அடாடா... மாதையா...''

''என்னங்க...?''

''இந்தப் போட்டோவுல இருக்கிறது ஜமீன்தாரோட பாட்டிதானே...!''

''அப்படீன்னுதான் ஐயா சொல்லுவாரு... தினமும் பார்த்த படம்தானே... காலாற நடக்கணும்னு, தோட்டத்துக்குப் போகலாம்.. வர்றீங்களா...?''

''த்செள, த்செள... இந்தப் படங்களைப் பார்த்துண்டிருந்தா, நேரம் போறதே தெரியாதேய்யா... எவ்வளவு நகை... எவ்வளவு நகை... நான், உன்கிட்ட மாத்திரம் சொல்றேன். கேட்டுக்கோ... ஜமீன்தாரோட பாட்டியாகட்டும், அம்மாவாகட்டும், இந்த நகைகளாலேதான் சோபிக்கிறாங்களே தவிர — சுயமான சௌந்தர்யம்கிறது — ஜமீன்தாரிணி மங்களாம்பாளுக்குத்தான். நீ என்ன சொல்றே?''

''ஐயோ, இதுல நான் என்னத்தைச் சொல்றதுக்கு இருக்குங்க...?''

''அந்த அம்மாவுக்குத்தான் எல்லாம் கச்சிதமாப் பொருந்தினது. அவங்க போட்டோ ஒண்ணு கூட இல்லையா...?''

''இல்லாமப் போகுங்களா... இருக்குமாயிருக்கும். எனக்குத் தெரியல்லீங்க...''

''இந்தப் பொண்ணு இன்பா இருக்காளே — அவ கூட அசப்புல ஜமீன்தாரிணி போல இல்லே...''

''அவுங்க நல்ல எலுமிச்சை சிவப்பு... இவங்க புது நிறம்...''

''அதெல்லாம் மண்ணுக்கு மண்ணு வித்தியாசப்படும்.. ஆனா பாரேன்.. நம்ம வீட்டு அன்னம்மா உடம்புலேயோ, சின்னம்மா உடம்புலேயோ ஜமீன்தாரிணியோட ஆவி புகுந்துக்கக் கூடாதோ? எங்கேயிருந்தோ வந்த பொண்ணு... அதும் உடம்புல ஏறிண்டிருக்கே... ஆமா, மங்களாம்பாளோட ஆவி, உங்கிட்ட எப்பவாவது பேசறதுண்டா...?''

''உம்—''

''என்னன்னு?''

ஸ்டேஷன் மாஸ்டர் சுவாரஸ்யமாய், மாதையனின் பக்கம் முகத்தைத் திருப்புகிறார்.

''என்னத்தைப் பேசப் போறாங்க? யாரை நம்பினாலும் இந்த டாக்டரை நம்பாதேன்னு சொல்லுவாங்க.''

''அப்படியா...? என்னைப் பத்தி?''

''ஐயோ, உங்களைப் பத்தி எதுவுமே பேச மாட்டாங்க...''

மாதையனும் தனக்குள்ள குறும்புடன் தான் பதில் சொல்கிறான்.

ஸ்டேஷன் மாஸ்டரின் பாடு கொஞ்சம் பரிதாபமாய் இருக்கிறது. என்னதான் ஆவி, பிசாசு இதெல்லாம் தாம் சோடித்த கதைதான் என்றாலும் — இன்பாவும் தனக்குள் மங்களாம்பாள் குடி கொண்டிருப்பது போலப் பேசி, மாதையனை ஏமாற்றி வருகிறாள் என்பதே புது விஷயம்... அதையும்விட, டாக்டரைப் பற்றி, அத்தனை துல்லியமாய் எச்சரித்தவள், தன்னைப் பற்றி, ஒன்றுமே



சொல்லாமலா இருப்பாள்...?

இருவரில் யார் பொய் சொல்கிறார்கள்...?

இதை, இன்னும் கொஞ்சம் விவரமாய் விசாரித்துவிடுவது என்கிற முடிவுடன் அவர், மாதையனை நெருங்கி நின்று, சிநேக பாவனையில் கேட்கிறார்.

''ஆமா மாதா... அந்த அம்மா, ஜமீன்தாரோட க்ஷேத்ராடனம் போனாங்களே... அப்புறம் எங்கே போனாங்களாம்...?''

''மேலேதான்... பிள்ளையில்லாம இருக்கப் பிடிக்கலே. ஏதோ ஓர் ஆத்துல விழுந்து செத்துட்டாங்களாம்...''

''அடடா:.. ஆத்துல குதிக்கிறவ, நகைகளைக் கழட்டி, படித்துறையில வச்சுட்டுக் குதிச்சிருக்கக் கூடாதோ... இப்படி, இளைய ஜமீன்தாரிணி அதே ஏக்கமா, படுத்த படுக்கையா ஆகியிருக்க வேண்டாமோல்லியோ...?''

''நீங்க ஒண்ணுங்க. சின்னம்மாவுக்கு நகையா பெரிசு? ஒரு புள்ளையத் தங்கமாட்டம் வளர்த்து, கிணத்துல பலியிட்டாங்க... இன்னொண்ணு பித்தா அலையுது...''

''கேட்க மறந்துட்டேனே... அவினாஷ் இப்ப தோட்டத்துலேயே சைக்கிள் விடறானுமே...''

''வீட்டுக்குள்ளேயே ரவுண்டு வராருங்க. அதைப் பாருங்க...''

மாதையன் சொல்லி, வாய் மூடவில்லை.

அவினாஷ், சைக்கிளில் மிக லாகவமாய்ப் பறந்து வருகிறான்...

''ஐயய்யோ!''

ஸ்டேஷன் மாஸ்டர், சைக்கிள் தன் மீது மோதி விடாமலிருக்கப் பக்கத்திலிருந்த தூணின் பின்புறம் பாய, அங்கே பரத்தி வைக்கப்பட்டிருந்த வர்ணக் குப்பிகள், தூரிகைகள் இவற்றின் மீது காலை வைத்து, பளிங்குத் தரையில் அவர் ஸ்கேட்டிங் விளையாட....

''ஹைய்யா... ஜோராயிருக்கு... விழுந்துடு... விழுந்துடுடா... இல்லேன்னா மோதிடுவேன்.:. ஏய் சைக்கிள், பிடி அவனை... அவன் தான் என் எதிரி... மாதையா...''

''வேணும் அவினாஷ்... வண்டியை நிறுத்து...''

மாதையன் கதறிக் கொண்டே ஓடி வர — அவனது வார்த்தைகளைக் கொஞ்சம் கூட லட்சியம் பண்ணாமல், அவினாஷ், முரட்டுத்தனமாய்ப் பெடலை மிதிக்கிறான்...

''குதிரையே வேகமாய்ப் போ... இவனைக் கொன்று என் தாயின் காலடியில் சமர்ப்பிக்கிறேன் என்று சபதம் எடுத் — மாதையா!''

''அவினாஷ்....''

''பெரியம்மா எனக்கு அம்மாதானே...''

''ஆமாப்பா... நீ வண்டியை நிறுத்து...''

''ஆகா... மாபெரும் சபையினில் நீ நடந்தால் உனக்கு மாலைகள் விழ வேண்டும்... நில்லுடா ஸ்டேஷன் மாஸ்டா!''

ஸ்டேஷன் மாஸ்டரின் பிராணன் பாதி போன நிலை... கீழே விழாமலிருக்க, பக்கத்திலிருந்த தூணைப் பிடிக்க —

தூண் கைக்கு அகப்படாமல், தூணைச் சுற்றியிருந்த துணி கையோடு வர, ஆதாரமில்லாத நிலையில் தூணின் முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து ஸேவிக்கிறார் ஸ்டேஷன்



மாஸ்டர்.

சற்று முன் சாப்பிட்ட இட்லி தொண்டை வரை வந்து இம்சிக்க, கொத்துமல்லி சட்னியின் காரம் நாசியில் ஏறி புரையேற...

"அம்மாம... செத்தேன்!"

அவர், குப்புறப் படுத்தபடியே தலையை உயர்த்த —

கண்ணெதிரே —

நெற்றியில் திட்டான ரத்தத்துடன் மங்களாம்பாள்...

'ஐயய்யோ... செத்தே போயிட்டேனு...'

அவரது தேகமே சில்லிட்டுப் போக — அதே கணத்தில் அவினாஷ், சைக்கிளைத் தூக்கி ஸ்டேஷன் மாஸ்டரின் மீது போட்டுவிட்டு, கதறியபடி ஓடி வருகிறான்.

"பெரியம்மா... உன்னை எங்கேயெல்லாம் தேடறது பெரியம்மா... இந்த ராட்சஸன் தான் உன்னை... ஐயோ, இல்லையே... இவன் தானே, உன்னைக் கொலை செய்ய, அப்பாவுக்கு வழி சொல்லித் தந்தான்... நான் ரகசியமா கேட்டுண்டிருந்துட்டு உன்கிட்டே வந்து சொன்னேனே.. அப்ப, சிரிச்சியே பெரியம்மா....பைத்தியமாட்டம்...இப்ப நிஜமாவே உன்னைக் கொன்னுட்டாரே அப்பா!"

"அவினாஷ்!!"

மாடிப் படிகளில் நந்து வெகு வேகமாய் ஓடி வருகிறான்.

அவினாஷ், யாரையும் லட்சியம் செய்யாமல் தூணைக் கட்டிக்கொண்டு அழுகிறான்...

"பெரியம்மா... ஐயோ பெரியம்மா... மேஸ்திரி — எங்க பெரியம்மாவை என்ன செய்யப் போறீங்க மேஸ்திரி... தூணுக்குள்ள வச்சு மூடப் போறீங்களா... ஐயய்யோ, மூச்சு இருக்கு போல இருக்கேடா.. பாவி! என்னை விடுடா... பெரியம்மாவைப் பார்க்கணும்... அம்மா... அம்மா... எங்கே அப்பா? அம்மாவைக் கொலை பண்ண அழைச்சிட்டுப் போயிருக்காரா...? கொலைகாரப் பாவி!"

இன்பா, மாடிப் படியிலிருந்து வேகமாய் இறங்கி வருகிறாள்...

அவினாஷ் அலறி அழுவதைக் கண் கொட்டாமல் பார்க்கிறாள்...

இதற்கு முன், எப்போதோ அவன், இதே தூணைக் கட்டிக்கொண்டு அழுதது போல...

எப்போது...? எப்போது...?

'அப்ப இவனுக்குப் பத்து வயசிருக்குமா... இருக்கும்...'

'யாரோ ஒருத்தர் கையைப் பிடிச்சு, தடுத்தபடியே அழுதான்... அந்த யாரோ ஒருத்தர் யார்...?'

வெறி பிடித்த மாதிரி, இளைத்த உடலும், பதறும் தேகமுமாய் அந்த மனிதர், தூணில் மங்களாம்பாளை ஒரு பொம்மையைப் புதைப்பது போல, அத்தனை நகைகளோடும் புதைத்து, அவசர அவசரமாய்ச் செங்கல்லையும் சுதையையும் குழைத்துப் பூசினாரே...

ஏன் யாருமே இந்த அநியாயத்தைத் தடுக்க முன் வரவில்லை?

"வேண்டாம்... நிறுத்து... அ..ம்..மா.."

இன்பா, தலையைப் பிடித்துக் கொண்டு, அருகிலிருந்த தூண் பக்கமாய்ச் சாய —

லோகநாதன், மகனை நோக்கிச் சாட்டையுடன் ஓடி வருகிறார்...

"உள்ளே போடா நாயே!"

"அப்பா... பெரியம்மாவை... பெரியம்மாவை..."

'சுளீ'ரென அவரது சவுக்கு அவன் மீது பாய —

"நில்லுங்க."

இன்பா, அவினாஷின் முன் பாய்ந்து வந்து தடுக்கிறாள்.

கண்கள் சிவக்க, கழுத்து நரம்பு புடைக்க, வியர்வை வெள்ளமாய்ப் பெருக நின்ற இதே லோகநாதனின் முகம் — அவள் மனத்தில் பல காலமாய்ப் பதிந்து போயிருந்த முகமாயிற்றே...

"நீ யாருடி என்னைத் தடுக்க...?"

"நீங்க ஏற்கெனவே செஞ்ச கொலையைப் பார்த்துட்டிருந்தவ... இந்த ரெண்டு கண்ணாலே!"

அவளது பதில், அங்கிருந்தவர்களைத் தூக்கி வாரிப் போடச் செய்தது.

(தொடரும்)

## பவர்கட் எதற்கு?



விருதுநகரில் தினந்தோறும் காலை ஆறு மணி முதல் 8 மணி வரை பவர்கட். ஏன் இப்படி? அந்த நேரத்தில்தான் முனிசிபாலிட்டி குடிதண்ணீர் விடுகிறது. சில கெட்டிக்கார வீட்டுக்காரர்கள் மோட்டார் உதவியுடன் தண்ணீர்க் குழாயில் பாயும் தண்ணீரை அதிகமாகத் தங்கள் உபயோகத்துக்கு இழுத்து விடுவதால் தண்ணீர் விடப்படும் நேரம் கரண்ட் கட். முனிசிபாலிட்டி இப்படித் தடுக்கில் புகுந்தும் கூட, சில அதிமேதாவிகள் கோலத்தில் புகுந்து விடுகிறார்கள். எப்படி? கரன்டை உற்பத்தி செய்ய ஜெனரேட்டரை வைத்துக்கொள்கிறார்கள். சொல்பவர், படத்தில் இருக்கும் செல்வம்.

ஒருத்தரைப் போல் ஒருத்தர் நிறம் இருத்தல் இல்லை.

## பொருத்தமளிக்க உமக்கென்றே 3 வித வண்ணச் சாயல்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றே.

| நேச்சுரல் —மாநிற மேனியருக்கு | லைட் —சிகப்பு மேனியருக்கு | கோல்டு —கருவண்ண மேனியருக்கு |
|---|---|---|
|  |  |  |

லக்மே காலமைன் ஒன்றுதான்
மூவித வண்ணச் சாயல்களில்
மோகனமாய் வருகுது:
நேச்சுரல், லைட், கோல்டு, இதில்
உமக்கொன்று சேர்த்தி,
ஒருங்கிணைய நேர்த்தி-எண்ணிலா
வண்ண மேனியரை இனம்பிரித்து
உணருதே லக்மே. இன்மணமுடன்
மேனிமீது இலகுவாய் இழையும்
லக்மே காலமைன் —தனிநிற
உரிமையைத் தருகுது உமக்கு.
பரிட்சார்த்தப் பேக்காகவும்
கிடைக்குது பதம்பார்க்க வசதியாக

# லக்மே காலமைன்

சரும வண்ணம் எவ்வண்ணம்
சாயலுண்டு அவ் வண்ணம்.

Tm



# பழசும் புதுசும்

"இந்த டவுனிலேயே நம்மளோட 'பிராஞ்ச் ஆபீஸ்' ஒண்ணு ரெண்டட்ட் பில்டிங்கிலே இருக்கு சார். வெரி ஓல்டு பில்டிங். அந்த பில்டிங் ஓனர் நாம கொடுக்கிற வாடகை போதலேன்னு காலி பண்ணச் சொன்னாரு. அப்புறம் கோர்ட் நோட்டீஸ் விட்டாரு. அந்த ஏரியாவிலேயே வேறு நல்ல பில்டிங் கிடைக்கிறவரை நாமளும் காலி பண்றதா இல்லேன்னு சொல்லியாச்சு. கேஸ் கோர்ட்டிலே பல வருஷங்களா இழுத்திட்டிருக்கு... அந்த பில்டிங்கை நாம உடனே மாத்தியாகணும். இல்லேன்னா நம்ம ஊழியர்கள் சிலர் அகால மரணமடைய நேரிடலாம்!" — என்றார் யூனியன் செகரட்டரி முத்துக்குமாரசாமி.

"என்ன மேன் சொல்றீங்க?" — என்று அகல விழித்தார் புதிதாய் ஜெனரல் மானேஜர் பதவி ஏற்றிருந்த ராகவன்.

"ஆமா சார். இப்போ மழைக்காலம் வேற... அங்கங்கே புயல் சின்னம்னு அடிக்கடி ரேடியோவில் பயமுறுத்திட்டிருக்காங்க. நீங்க ஒரு முறை பார்த்தால் புரியும் சார். அந்த பில்டிங் எப்போ இடிஞ்சு விழலாம்னு காத்திட்டிருக்கு. உள்ளே இருக்கிற போதெல்லாம் நம்ம ஊழியர்கள் உயிரைக் கையில் பிடிச்சுக்கிட்டுத்தான் வேலே செய்யறாங்க! உங்களுக்கு முன்னால் ஜெனரல் மானேஜர் பொறுப்பேற்றிருந்த அத்தனே பேர்கிட்டேயும் இந்தக் கோரிக்கையை வைத்தும் எந்தப் பயனும் கிடைக்கவில்லே!"

"அப்படியா... இட் ஈஸ் ஹியூமரஸ்!"

"அந்தத் தெருவுக்கே திருஷ்டிப் பரிகாரம் நம்ம பில்டிங்தான் சார்... அந்தத் தெருவிலிருக்கிற மற்ற எல்லாக் கட்டடங்களுமே ரீஸெண்ட்லி கன்ஸ்ட்ரக்டட் அண்ட் ஹாவ் எ மஜெஸ்டிக் லுக்!"

"ஓகே, நீங்க போங்க... கூடிய சீக்கிரமே அந்த பில்டிங்கிலிருந்து ஆபீஸை ஷிஃப்ட் பண்ண நான் ஏற்பாடு பண்றேன்!" என்று புது மானேஜர் உறுதி தரவும் மனநிறைவு பெற்ற முத்துக்குமாரசாமி தன் சகாக்களுடன் அறையை விட்டு வெளியேறினார்.

வானொலியில் அறிவித்தபடியே அன்றிரவு அதிசயமாய்க் கனத்த மழை பெய்தது. சுழன்று சுழன்று அடித்த பேய்க் காற்றில் மரங்கள் தலைவிரித்தாடின. சில வேரிழந்து விழுந்தன. வானில் விடாமல் நடந்த மின்னல் பெண்ணின் நாட்டியத்துக்கு இடியின் பக்க வாத்தியம் வேறு!

உடம்பெல்லாம் யூனியன் ரத்தமே ஓடிக்கொண்டிருந்த முத்துக்குமாரசாமிக்கு உறக்கம் பிடிக்கவில்லே. படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார் — 'இந்நேரம் அந்த 'ஓல்டு பில்டிங்' இடிந்து விழுந்திருக்கும். நல்ல வேளையாய் இந்தப் புயல் இரவில் அடித்தது — ஊழியர்கள் பிழைத்தார்கள். மானேஜர்கள் செய்ய விரும்பாத வேலேயை இயற்கை செய்ய வைத்து விட்டது!' என்று நினைத்துக் கொண்டார்.

பொழுது விடிந்தும் மழை சன்னமாய்ப் பெய்து கொண்டுதானிருந்தது. குடை பிடித்துக் கொண்டே முத்துக்குமாரசாமி அந்த பில்டிங்கின் அலங்கோலத்தைப் பார்த்துவரச் சைக்கிளில் கிளம்பினார்.

அங்கு சென்று பார்த்த பொழுது இயற்கை நடத்தியிருந்த விநோத நாடகம் இவருக்குச் சிரிப்பை வரவழைத்தது!

மற்ற எல்லாப் புதுக் கட்டடங்களும் இடிபாடுகளுக்குள்ளாகி வளைந்து நெளிந்து கொண்டு நிற்க, இவர்களின் 'பிராஞ்ச் ஆபீஸ் பில்டிங்' எந்த இடிபாடுகளுமின்றி நிமிர்ந்து நின்றது!

— பட்டுக்கோட்டை ராஜா

# “கட்டிக்கிட்டா மிலிட்டரிக் காரனைத் - தான் கட்டிக்குவேன்”

சுமார் நானூறு வீடுகள் உள்ளன. ஒவ்வொரு வீட்டில் இருந்தும், குறைந்த பட்சம், ஓர் ஆண் ராணுவத்தில் பணியாற்றுகிறார். இந்த கிராமத்தைச் சுற்று வட்டாரத்தில் 'குட்டி பஞ்சாப்' என்று அழைக்கிறார்கள்.

மேற்கண்ட செய்தி அடங்கிய கடிதம் எங்களை அடைந்ததிலிருந்து எங்கள் ஆவல் கட்டுக்கடங்காமல் மீறியது. எப்படியும் அந்த ஊரைப் பார்த்தே தீருவது என்று சென்னையிலேயே கங்கணம் கட்டிக் கொண்டோம்.

ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து ஆலங்குளம் செல்லும் மண்ணும் தாரும் கலந்த பாதையில் 'எனக்கெதற்கு வம்பு?' என்கிற ரீதியில் கொஞ்சம் ஒதுங்கி, உள்வாங்கி இருக்கிறது பெருமாள் தேவன் பட்டி என்ற குக்கிராமம்.

நாங்கள் அந்த ஊரில் காலை வைத்ததும், ''சொஸைட்டி செகரட்டரியைப் பார்க்க வந்தீயளா... இப்படியே போங்க...'' என்று கைநீட்டிக் காட்டினார்கள்.

கைநீட்டிய பக்கம் ஒதுங்கினோம். ஒரு பொதுக் கிணறு. சகடையற்ற அந்தக் கிணற்றில், பெண்கள் இடுப்பளவு உள்ளே குனிந்து தண்ணீரை இழுத்துக் கொண்டிருந்தார்கள். பார்த்தபோது, கொஞ்சம் வேடிக்கையாக, கொஞ்சம் பயமாக, கொஞ்சம் பரிதாபமாக இருந்தது.

சாக்கடைகளுக்கு நடுவில் தாவித் தாவிக் கால்களை வைத்து, நொண்டி ஆடிப் போனோம். ('ஊர்த் தெருவெல்லாம் சாக்கடைங்க!' என்று பின்னால் ராஜாமணி சொல்லப் போகிறார்) தெருக் கோடியில் 'பெருமாள் தேவன் பட்டி பால் உற்பத்தியாளர்கள் சங்கம்' போர்டுடன், இறுக மூடியிருந்த இரும்புக் கிராதி கேட்டுடன் எங்களை 'வருக' என்றது.

தட்டினோம். செக்ரட்டரி (மீசை, மீசை, மீசை) வெளியே வந்தார். சிரித்தார்.

''நான்தான் செக்ரட்டரி கார்மேகம். நீங்க?''

''கல்கி. உங்களுக்குச் சொந்த ஊர்?''

''இதே பெருமாள்தேவன் பட்டிதான். ஏன்?

''நீங்க மிலிட்டரியில சேரலியா?''

''அதுக்காகக் கேட்கறீங்களா. இந்த ஊர்ல இருக்கிற ஆம்பிளைங்க, ஒண்ணு மிலிட்டரியில இருப்பாங்க. இல்லே போலீஸ்ல இருப்பாங்க. நானும் போலீஸ்ல உத்தி

* உருளையில்லாத கிணறு.



யோகத்துக்குப் போயிருக்க வேண்டியவன்தான். ஸெலக்‌ஷன் ஆர்டர் கூட கொடுத்துட்டாங்க. அந்த 'பாட்ச்ல 10,000 பேர் சேர வேண்டியது. அதில் யாரோ நக்ஸலைட்டுகள் இருக்காங்கன்னு ஒட்டுமொத்தமா அந்த லிஸ்டை Drop பண்ணிட்டாங்க. அப்புறம் மறுபடி apply செஞ்சு எல்லா விஷயங்களும் முடிஞ்சப்புறம் பார்த்தா age bar ஆயிடிச்சின்னு சொல்லிட்டாங்க. பார்த்தேன். ரெண்டு பால் மாடு வேற வச்சிருக்கிறதால இங்கியே செக்ரட்டரி ஆயிட்டேன். ஊர்ல நானூறு குடும்பம் இருக்கு. ஒவ்வொரு குடும்பத்திலேர்ந்தும் ரெண்டு, மூணு பேர் பட்டாளத்தில இருப்பாங்க. பட்டாளத்திலேர்ந்து பணம் அனுப்புவாங்க. பொம்பளைங்க பால் மாடு வெச்சிருக்காங்க...'' பேசிக் கொண்டே எழுந்தார். ''ஊரைச் சுத்திப் பார்க்கலாம் வாங்க'' என்றார்.



* மாரிமுத்தம்மா

தெருக்கள் பின்னிக் கொண்டு இருந்தன. வீடுகள் ஏறக்குறைய அடைத்துக் கிடந்தன. 'பஸ் ஸ்டாண்ட்'டில் ஒரு பெட்டிக் கடையில் மிட்டாய் கலரில் ஷர்பத் பாட்டில்கள். ஒன்றிரண்டு ரிடையரான மிலிட்டரி ஆசாமிகள் கூடி அமர்ந்து ஊர் நியாயம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''எங்க ஊர்ல எந்தப் பையன் நல்லா வாட்ட சாட்டமா வளர்ந்தாலும் 'பையன் டாக்டராப் போவான்,



* ரகோத்தமி

இஞ்ஜினியராப் போவான்'னு சொல்ல மாட்டாங்க. 'பட்டாளத்திலதான் சேருவான்!'னு சொல்லுவாங்க. வேற ஊர்ல பட்டாளத்துக்காரனுக்குப் பொண்ணு தர மாட்டாங்க. இந்த ஊர்ல பட்டாளத்துக்காரனுக்குத்தான் பொண்ணு தருவாங்க. எனக்குப் பொண்ணு கெடைக்கறதுக்குள்ளே நான் பட்டபாடு... ஹே... ஹே... ஹே...''

''உங்க ஊர்ல மட்டும் ஏன் வீட்டுக்கு ஒருத்தராவது மிலிட்டரியில சேரணும்னு சபதம் எடுத்திருக்காங்க?''

''நாங்க அத்தனை பேரும் யாதவ குலத்தைச் சேர்ந்தவங்க. பாண்டவர்கள் காலத்தில — குருக்ஷேத்திரச் சண்டையில, யாதவங்க யுத்தம் செய்ஞ்சாங்கங்கிறதால யாதவ குலத்துக்காரங்க எல்லாரும் ராணுவத்துக்குப் போகத் தொடங்கினாங்கன்னு எங்க ஊர்ப் பெரியவங்க சொல்வாங்க... வாங்க... இதான் நம்ம ஊர் போஸ்ட் ஆபீஸ்.''



* பெருமாள்தேவன் பட்டி கிராமம்.

**போ**ஸ்ட் மாஸ்டர் ரங்கராஜுலு ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து பஸ்ஸில் வந்து போகிற முன்னாள் ராணுவ ஊழியர். இவர் கூடவா? ஆரோக்கியமாகத் தெரிந்தார். ஆனால் கால்களில் விரல்கள் இல்லை.

''காஷ்மீர் போன்ற பனிப்பிரதேசங்களில் ஐஸில நடக்க வேண்டியிருக்கும். மிலிட்டிரின்னு சும்மாவா? என்னதான் பூட்ஸ், ஸாக்ஸ் போட்டிருந்தாலும், கால் விரல்கள், கைவிரல்கள் எல்லாம் ரெண்டு நாள் கழிச்சு கறுப்பாப் போய்டும். ரத்தமே விரலுக்குப் பாயாது. சும்மா, இப்படி தட்டினாப் போதும் (விரலால் சுண்டுகிறார்) அந்தக் கறுப்பு விரல்கள் உதிர்ந்து போய்டும்... நம்ப கேஸ்ூம் அதான்'' என்றார். படு காஷுவல். தண்டு வடத்தில் சிலீர் என்று ஐஸ் வைத்த மாதிரி இருந்தது.

அந்தத் தபால் நிலையத்திற்கு மாதம் பிறந்தவுடன் சுமார் 350 மணி ஆர்டர்கள் மூலம் சுமார் 63,000/— ரூபாய் அந்தக் கிராமத்தின் குடும்பங்களுக்குப் பட்டுவாடா செய்வதற்காக வந்து சேர்கின்றனவாம். அந்தத் 'துக்குளியூண்டு' போஸ்ட் ஆஃபீஸில் ஊர் மக்கள் ஒரு கோடி ரூபாயை டெபாஸிட் செய்திருக்கிறார்களாம். வருமான வரி இல்லை!



* இசைவாணி

''இந்த ஊர்ல ஆயிரம் பேருக்கு மேல மிலிட்டிரியில இருக்காங்க சார்'' என்றார் போஸ்ட் மாஸ்டர், காலரைத் தூக்கி விட்டுக்கொள்ளாத குறையாய்.

''ஊருக்குள்ள போலாம் வாங்க'' என்று அழைத்தார் கார்மேகம். நடந்தோம்.

''இந்த வீட்ல நேத்து ஒரு கல்யாணம் நடந்தது. பையன் மிலிட்டிரி. லீவில வந்து தாலி கட்டியிருக்காரு. இது பெரியம்மா. இவங்களுக்கு மூணு பசங்க. மூணு பேரும் மிலிட்டிரியில இருக்காங்க.''

''யாரு இவுக?''

''பத்திரிகைக் காரங்க பெரியம்மா.

உங்க பேர் என்ன?''

''மாரிமுத்தம்மா'' — காமிராவை ரெடி செய்தவுடன் மாரிமுத்தம்மா சற்றே விறைப்பாய் பாட்டில் க்ரீன் புடைவையுடன், கழுத்து நகைகளுடன் போட்டோ பிடிப்பவரைப் பார்க்கத் தொடங்கினுர்.

''உங்களுக்கு எத்தனை பிள்ளைங்க?''

''மக்க மூணு பேரு. எல்லா மக்களும் மிலிட்டரிக்குப் போயிட்டாக.''

''ஒருத்தரையாவது பக்கத்தில வெச்சுப் பாத்துக்கணும்னு உங்களுக்கு ஆசையில்லியா?''

''இருக்குது. நாட்டுக்கு உழைக்கணுமில்ல? வருஷத்துக்கு ஒருக்காதான் வாராக. அம்மாவுக்குச் சௌகரியமில்லேன்னு தந்தி அடிச்சா ஓடோடி வருவாக!''


* கார்மேகம்

மாரிமுத்தம்மா பேசிக் கொண்டிருக்கையில் வீட்டுக்கு உள்ளே இருந்து புதுச்சரட்டுடன் ஒரு பெண் வெளிப்பட, ''இதான் இசைவாணி'' என்ருர் மாரிமுத்தம்மா.

இசைவாணியின் முகத்தில் புதுமணப்பெண்ணின் பூரிப்பு.

''நான் இங்க லோக்கலில் பாலசேவிகாவாக இருக்கிறேன். அவரு மிலிட்டிரி. மிலிட்டிரிக்காரன்னு என்ன கொறைஞ்சிடுது. எங்க ஊர்ல நல்ல தண்ணியே இல்லே. பொட்டல் பட்டிக்கும் எங்க ஊருக்கும் பொது மோட்டார். அங்கேயே தண்ணி போதலேன்னு எங்களுக்கு வர்றத நிப்பாட்டிட்டாக. இப்போ ஒரு மைல் தள்ளிப் போய்த்தான் தண்ணி எடுத்துக்கிட்டு வர்றோம்! அதுவும் மசங்கிட்டா தண்ணிக்கு ஒத்தையில போக மாட்டோம்.''


* ரங்கராஜுலு

''எங்க ஊர்ப் புள்ளைக தனியாப் போனு ஒருத்தரும் ஒண்ணும் பண்ண முடியாது. ஆனு புள்ளைகளைத் தனியா அனுப்பறது கெடையாது'' என்ருர் மாரிமுத்தம்மா.

அதற்குள் வீட்டுக்குள்ளேயிருந்து இன்னெரு இளம் பெண் துள்ளிக் கொண்டு வெளிப்பட்டாள். போட்டிருந்த டாலர் செயின், பற்களுக்கு இடையில்!

''இந்தா ரகோத்தமி, நீ யாரைக் கட்டிக்கப் போறே சொல்லு.''

''கட்டிக்கிட்டா மிலிட்டிரிக்காரனைத்தான் கட்டிக்குவேன். மிலிட்டிரிக்காரன்னு ஒரு கௌரவந்தான். இந்தியாவெல்லாம் சுத்திப் பாக்குறோமில்ல?''

''சார். எக்ஸ் — சர்வீஸ் மேன்னு சொன்னு ஒரு வேலை கெடைச்சிடுது. அதனலை பின்னலை கவலேயில்ல. மிலிட்டிரிக்குப் போயிட்டா மாசாமாசம் சம்பளத்தைச் சொளையா கிராமத்துக்கு அனுப்ப முடியுது. அதுவுமில்லாம மிலிட்டிரிக்காரன் செத்துட்டாக்கூட அவன் பெண்டாட்டிக்கு அவளோட ஆயுசு மட்டுக்கும் பணம் வந்துடுது. அதனலை பொம்பளைங்களுக்கும் சாப்பாட்டுப் பிரச்னை இல்ல. அதனலைதான் இந்த ஊர்ல எல்லாரும் மிலிட்டிரியிலசேர்ருங்க. மிலிட்டிரிகாரனுக்குப் பொண்ணு கொடுக்கருங்க'' — என்ருர் பக்கத்தில் இருந்த ராஜாமணி; மிலிட்டிரியிலிருந்து ரிடையரானவர். தற்போது ஆசிரியராய்ப் பணியாற்றுபவர். இவர் சொன்ன இன்னெரு வாக்கியம் கட்டுரையின் தொடக்கத்தில்.

* ராஜாமணி


திரும்பும் வழியில் பாண்டிமாதேவியைப் பார்த்தோம். கணவர் ராணுவத்தில் மாண்டதால் வெள்ளைப் புடைவை. வெற்று நெற்றி.

''ஒரே பையன். மிலிட்டிரிக்கு அனுப்பிட்டேன். ஆம்பிளைத் துணை வேணுந்தான். இருந்தாலும் ராணுவத்துக்காக அனுப்பிட்டேன்.''

* பாண்டிமாதேவி


''இப்படி எல்லாரும் தேச சேவைசெய்றஊர் சார் இது. இங்க மாட்டாஸ்பத்திரி இருக்கு. மனுஷனுக்கு ஆஸ்பத்திரி இல்ல. நல்ல தண்ணிஇல்லை. பஸ் வசதி கெடையாது. காலேயில சாயங்காலம்நாலு தடவையோ என்னவோ வரும். அதோ அதாங்க வாட்டர் டாங்க். காலிதான்! ஊரை முழுசாப் படம் எடுக்கணும்னு அது மேலஏறி எடுங்க'' என்ருர் கார்மேகம்விடை கொடுத்து அனுப்பும் நேரத்தில்.

'இந்தியா அதன் கிராமங்களில் வாழ்கிறது' என்று சொன்ன காந்தியை நினைத்துக் கொண்டோம். கையசைத்துவிடைபெற்றோம்.

# மாண்புமிகு முதலமைச்சர்!

சருக்கம் — 27

## "மனையறம் புரிந்து வாழ்வார்!"

கபாலீச்சுரன் இத்தனை நாள் வரை எங்கு சென்றான்? எப்படி மறைந்தான்? இப்போது திடும்மென்று முளைப்பானேன்?

ஜோதி குறித்து இவனும் முறையிட வந்திருக்கிறானோ?

வரச் சொல்லி உத்தரவிடுகிறார்.

உள்ளே நுழைந்த கபாலீச்சுரன் வணக்கம் போடுகிறான்.

"வா, கபாலீச்சுரா! எங்கே போய் மறைந்தாய்? நான் உடல்நலம் குன்றி உன்னைக் காணவே இல்லை?"

"எனக்கென்ன வேலை சுவாமி?"

"ஏன்? ஜோதி என்னவானாள்? அவளது நிழலல்லவா நீ? அவளைக் காண முடிகிறது. உன்னைக் காண முடியவில்லையே?"

"இப்போது நான் ஜோதியின் நிழலல்ல; ஜோதி, சோழமாமன்னரின் நிழலாகி விட்டாள்!"

"கபாலீச்சுரா!"

— அதிர்ந்து போனார் சேக்கிழார்.

"ஜோதியா இப்படி...?"

முடிக்கவில்லை. இடைபுகுந்தான் கபாலீச்சுரன்.

"அமைச்சர்பிரானே! தவறியும் ஜோதியைத் தாறுமாறாகப் பேசிவிட வேண்டாம்!"

"இது என்ன குரல் மாற்றம்?

இதுவரை கரகரப்புடன் பேசி வந்த கபாலீச்சுரன், இப்போது காவலன் குலோத்துங்கன் குரலில் பேசுகிறானே!

சேக்கிழார்வியப்பு அடங்குவதற்குள், கபாலீச்சுரன் தனது புனைவடிவத்தை முற்றாகக் கலைக்கிறான்.

"சோழ பூபதி?"

மேலும் அதிர்ந்து போனார் சேக்கிழார்.

கலகலவென்று சிரிக்கிறான் அநபாய குலோத்துங்கன்.

"அமைச்சர்பிரானே! அநபாயன் தமிழ்ப் பித்தனாக இருக்கலாம். ஆனால் குலோத்துங்கன் அரசியல்ராட்சசன்! தியாகவல்லி இங்கு வந்து சென்றதை அறிந்தேன்! ஏன் வந்திருப்பாள் என்பதைப் புரிந்தேன்! புனைவடிவத்தைக் கலைந்தேன்! தெய்வத் தமிழே! காதலை வாழ்த்தும் கவிஞர் நீங்கள்! இப்போது எழுதி இருக்கும் திருநாட்டுச் சிறப்புப் பகுதியில், 'காதல் செய்வதோர் காட்சி மலிந்ததே!' என்று பாடியிருப்பதாக ஜோதிசொன்னாள். எங்கள் காதலையும் வாழ்த்துங்கள்."

சேக்கிழார் என்ன மறுமொழி பகர்வார்?

"தியாகவல்லிக்குக் கொடுத்த வாக்குறுதியை நான் காக்க வேண்டும் அநபாயா!"

"இந்தக் காதலால் எவருக்கும் பங்கமில்லை; இந்நாட்டுக்கும் பங்கமில்லை; தேவியர்களின் சுகங்களுக்கும் பங்கமில்லை."

"சோழ மாமன்னா! நான் விசாரிப்பது..."

"சேக்கிழாரே! இது என் சொந்த விஷயம்! இதில் தலையிட எவருக்கும் உரிமையில்லை. நான் வருகிறேன்!"

குலோத்துங்க சோழ மாமன்னன் இரவு நேரம் அதிகரிப்பதால், மேலும் நீடிக்கவிருப்பமின்றி விடைபெற்றுச் சென்றான்.

ஆயினும் நன்மை கருதி அவன் சற்று உரத்தே நாடகமாடி விட்டான்; வருவது வரட்டும்...

மனம் பெரிதாகக் கலக்கமுற்று மஞ்சம் நாடிச் சென்றார் சேக்கிழார்.

ஜோதியா? ஜோதியா? ஜோதியா?

இதே கேள்விக் குறியை எத்தனை முறைதான் எழுப்பிக் கொள்வார் எழிலார்ந்த தமிழின் பொழிலார்ந்த புலமைச் செல்வர் சேக்கிழார்?

ஜோதி...! ஜோதி...! ஜோதி...!

இமைகளை மூடினாரேயொழிய எங்கே தூக்கம் என்று அவை கேட்டன. சிந்தனை முழுவதும் ஜோதியாய்ப் பிழம்பு சூழம்பியது. வெகுநேரத்துக்குப் பிறகு...

நித்திரையில் ஆழ்ந்து போனார்.

"ஜோதி! நீ குலோத்துங்கனைக் காதலிப்பது தருமமாகாது!"

"காதலுக்குக் கூடவா, தருமம், அதருமம்? அகநானூறு கண்ட தமிழ்ச் செல்வமா இப்படிப் பேசுவது?"

"குலோத்துங்கன், சோழப் பேரரசின் சுந்தர புருஷன்!"

"சுவாமி! நான் காதல்பிச்சை வேண்டியது ஒருவரிடம்; ஆனால் அங்கு ஏமாற்றம் ஏற்பட வேறு ஒரு கரம் பிச்சையிட்டது. இட்ட கரம் மன்னர் கரம். ஏற்காமல் இருக்க முடியுமா?"

"யாரை நீ காதலித்தாய்?"

"காலம் கடந்த செய்தி!"

"ஆனாலும் அறிய விரும்புகிறேன்."

"ரேவதி நட்சத்திரத்தை!"

ஓ... இவள் தன்னைக் காதலித்து இருக்கிறாள். தானும், ஒருசமயம்... ஒரு சமயம்...

"நட்சத்திர சந்தி ஒத்துவரவில்லை, ரேவதி!"

ஜோதியின் கண்களில் கொற்கை முத்துக்கள்.

"ஒத்து வரவில்லை என்பதையறிந்து ஒதுங்கினேன்; ஆனால் பதுங்க முடியவில்லை. சோழ பார்த்திபன் சொப்பனத்தைக் கலைத்து விட்டார்."

"நான் கட்டளையிடுகிறேன் ஒதுங்கிக் கொள்!"

"திருத்தொண்டர் புராணம் முடியட்டும்; ஒதுங்கிக் கொள்கிறேன்!"

"நீ ஒதுங்கவில்லையென்றால் திருத்தொண்டர் புராணம் திருநாட்டுச் சிறப்போடு நின்று போகும்!"

"போகட்டுமே! அதன் புகழ் பாதிப்பு எனக்கல்ல; தங்களுக்கு! குன்றத்தூர் புலவரேறு அரைக் காப்பியம் பாடினார் என்று குறை சொல்லப் போவது வரலாறு; கோதை ஜோதியல்ல!"

அதிர்ந்து போனார் சேக்கிழார். உண்மையும் இதுதானே? பாதியில் நிறுத்துவது தமிழ்ப் பாவமல்லவா? காப்பியத் தற்கொலையல்லவா? தொண்டர்களுக்குச் செய்கிற துரோகமல்லவா? —

ஜோதி கலகலவென்று நகைக்கிறாள்; மேலும் மேலும் நகைக்கிறாள்; நகைத்துக் கொண்டே இருக்கிறாள்.

கனவு கலைந்து பேரதிர்ச்சிக்குள்ளானவர் போன்று எழுந்து மருள மருள விழிக்கிறார் சேக்கிழார். கண்களை நிமிட்டிச் சுற்றும் முற்றும் கவனிக்கிறார்.

ஓ... ஜோதி, ஜோதி, ஜோதி!

எங்கோ விடிசேவல் கொக்கொரக்கோ என்று செக்கரக்கோவைக் கூவியழைக்கிறது.

**சோ**ழமாதேவி, சேக்கிழாரிடம் சென்று முறையிட்டதும், பிறகு குலோத்துங்கன் சென்று 'காதல் என்பது எனது சொந்த விஷயம்' என்று வெளியிட்டதும் ஜோதியின் இரு செவிகளிலும் இரு அம்புகளாய்ப் பாய்ந்தன.

அவள் துடித்த துடிப்பு, புழு துடித்திருக்காது; அவள் பட்ட பாடு அவல் பட்டிருக்காது.

ஆ! இனி சேக்கிழார் முகத்தில் எவ்வாறு விழிப்பது? எந்த முகத்தைக் களங்கமற்ற நிலவாக்கி முகம் பார்த்தோமோ, அந்த நிலவு மங்குகிறது. சந்தர்ப்ப மேகக்கூட்டங்கள் சதிபுரிகின்றன. ஓ... வானமே என்னை விழுங்கி விடு! விழுங்கி விடு!

ஒரு வார காலமாகவே ஜோதி அந்தப் பக்கமாக எட்டிப் பார்க்கவில்லை.



சேக்கிழார் மட்டும் எதிர்பார்த்தார்.

ஏன் எதிர்பார்க்கிறார்? முன் பிறவியில் அறுந்து பட்ட நூல், இப்பிறவியில் காற்றில் அலைவது போல...

இதற்கிடையில்...

சேக்கிழார் எழுதிவரும் பெரிய புராணம் எந்தவிதத்திலும் தடையாகவில்லை. அது இப்போது அவரது வாழ்நாள் கடமையாக வளர்ந்து வந்தது.

கனவில் ஜோதி சொன்ன கருத்துக்கள், ஏதோ நனவில் சொன்னது போல நெஞ்சில் நின்றன.

அறுபத்து மூன்று நாயன்மார்களும் அவரது எழுத்தில் அழகோவியமாகத் திகழ்ந்து வந்தனர். புராண நாயகரராகச் சுந்தரர் ஏற்ற பாத்திரம்தான் பெரிய புராணத்தைச் சுந்தரத் தமிழாக்கி வந்தது.

இடையில் நடந்த ஒரு கசப்பான நிகழ்ச்சி நெஞ்சை நெருஞ்சி முள்ளாகக் குத்தினாலும், அதனைத் தாங்கிக் கொள்ளவே செய்தார் சேக்கிழார்.

அந்த நெருஞ்சிமுள் நிகழ்ச்சி...

பத்து தினங்கள் வரை மட்டுமே ஜோதியால் சேக்கிழாரைப் பாராமல் இருக்க முடிந்தது. அதற்குமேல்... அதற்குமேல்...

அவளது தலையே வெடித்துவிடும் போல வேதனை கண்டு விட்டாள்.

அப்போதுதான், அத்தாணி மண்டப வழக்குகள் தீவிரமாக நடைபெற்று வந்தன.

ஒரு நாளிரவு சேக்கிழார் மாளிகை நாடி ஜோதி வந்தாள். அப்போது அவர் பெரிய புராணத்தில் திருநீலகண்ட நாயனாரைப் பாடிக் கொண்டிருந்தார்.

வாயிலில் ஜோதி வந்து காத்திருப்பதாகச் செய்தி வருகிறது..

ஜோதி, ஜோதி...

பக்கத்திலிருக்கும் திருமந்திர ஓலை நாயகத்திடம் "எந்த இடத்தில் நிறுத்தினேன்?" என்று கேட்கிறார்.

ஓலைநாயகமும், "வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்" என்றான்.

"இதனையே நான் சொன்னதாக ஜோதியிடம் போய்ச் சொல்லி அனுப்பி வை."

ஓலை நாயகம் மாளிகை வெளிவாசலுக்கு வருகிறான்.

ஆ! ஜோதியா இவள்! ஏனிப்படி இளைத்துக் காணப்படுகிறாள்?

ஜோதி ஆவலைக் கண்களில் இறுத்திக்கேட்கிறாள். "உள்ளே வரலாமா?"

"இல்லை."

"இல்லை...?"

"நீலகண்ட நாயனார் வாழ்வில் நீந்த முடியாமல் நீந்திக் கொண்டிருக்கிறார்!"

"ஓகோ! பரத்தை வாழ்வுடையவர் நீலகண்டர். பிரம்மசரிய வாழ்க்கையை அது பிசைந்து பார்க்கத்தான் செய்யும். என்ன சொன்னார்?"

"நீங்கள் வருகிற போது பாடியிருந்த வரியை உங்களிடம் சொல்லியனுப்பச் சொன்னார்."

"என்ன வரி?"

"வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்!"

"ஆகா! அற்புதமான வரி! இவ்வடிக்கு மேலடி?"

"மெய்யடியார்கட்கான பணி செயும் விருப்பில் நின்றார்!"

"இந்த அடிக்குரியவள் நான் என்று சொல்லுங்கள் நாயகமே!"

ஜோதி தன்னை மறந்து புலம்பலுற்றாள். "பரதக் கலையின் தலைமைப் புதல்வியே! உண்மையைச் சொன்னால் நீங்கள் வெளியே அழுகிறீர்கள்; முதலமைச்சர் உள்ளுக்குள் அழுது கொண்டிருக்கிறார். அறுபது நாழிகையும் அருகாமையிலிருக்கும் அடியேன் மட்டுமே இதனையறிவேன். தில்லைவாழ் அந்தணர்ச் சருக்கத்தை அவர் பாடத் தொடங்கிய போது... அவர் தம்மை மறந்து அழைத்த குரல் 'ஜோதி!' பிறகு பாடுகிறார்..."

ஓலை நாயகம் கண்கள் குளமாய் விட்டன. அவன் குரல் தழுதழுக்கப் பாட்டைச் சொல்லுகிறான்...

" ஆதியாய் நடுவும் ஆகி
அளவிலா அளவும் ஆகி
ஜோதியாய் உணர்வும் ஆகித்
தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப்
பெண்ணுமாய் ஆணும்ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப்
பொதுநடம் போற்றி! போற்றி! —

என்று உங்களையும் உங்கள் நடனத்தையும் எங்கே வைத்தார் பார்த்தீர்களா? பெண்ணுமாய் ஆணுமாகி... புரியவில்லையா?"

"புரிகிறது, புரிகிறது, நன்றாகவே புரிகிறது ஓலைநாயகம்!"

ஜோதி, சேலைத் தலைப்பை வாயில் புதைத்துக் கொண்டு புலம்பியவாறு ஓடிச் சென்று பல்லக்கில் ஏறுகிறாள். அப்படி அவள் ஏறுகிறபோது, சற்று அதிகமாகவே விசும்பிப் புலம்பி விட்டாள்.

சேக்கிழார் செவியில் அது விழவே, எழுந்து வந்து சாளரத்து வழியாகக் கவனிக்கிறார். 'பேதைப் பெண்ணே! நீ குலோத்துங்கனைக் காதலிக்கவா திருநடம் புரிந்தாய்?' என்று மனம் முனகிக் கொள்கிறது.

இந்த நெருஞ்சிமுள் நிகழ்ச்சி இன்னமும் குத்திக் கொண்டிருப்பதில் கசிந்த கடுகளைய ரத்தத்துளிகள்... ஜோதியின் கண்ணீர்த் துளிகள்...

பின்னர், சில நாட்களுக்குப் பிறகு...

வழக்கெல்லாம் ஓய்ந்து அமைதி நிலவிய நாட்களுக்குப் பிறகு...

சோழமாமன்னன் குலோத்துங்கன் சேக்கிழார் மாளிகையில் அவசர அவசரமாக நுழைந்து கொண்டிருக்கிறான்.

சிவத்தியானத்தை முடித்துக் கொண்டு அப்போதுதான் வெளியில் வந்தமர்ந்தார்

# "வாடிக்கையாளர் புகார் பிரிவு" என்ற அமைப்பை கரூர் வைஸ்யா வங்கியில் நீங்கள் காணமாட்டீர்கள்

## காரணம்: எமது கிளை ஒவ்வொன்றிலும் மேனேஜர் தலைமையில் பணிபுரியும் ஊழியர் குழாம், நடவடிக்கை எடுக்க தேவைப்படும் புகார் எதற்கும் இடமளிப்பதில்லை.

அவர்கள் உணர்ந்துள்ளார்கள், நீங்கள் நல்லதோர் வாடிக்கையாளர் என்றும், உங்கள் நேரம் பொன்னான நேரம் என்றும்.

எனவே அவர்கள் உங்கள் தேவைகளுக்கு உடனடி கவனம் அளிக்கிறார்கள்; நீங்கள் காத்திருக்க வைக்கப்பட்டால் அது மிக அவசியமான குறைந்தபட்ச நேரத்திற்கே இருக்கும்.

நீங்கள் எமது வழக்கம்போலான இதமும் கனிவும் நிறைந்த சேவை பெறுகிறீர்கள்—அதில் எமது அறிவு முதிர்ந்த சேவை அடங்கியிருப்பதையும் காண்பீர்கள்.

இவ்வளவு இருந்தும் உங்களுக்கு ஏதோவொரு புகார் இருக்குமானால், எமது கிளை மேனேஜர் அதற்கு உடனடித் தீர்வுகாண துவங்குவார்;



இம்முயற்சியில் அவருக்கு எமது ஊழியர்களின் ஒத்துழைப்பு மனப்பான்மை பெருந்துணை புரியும்.

**வாருங்கள், எமது 149 கிளைகள் மூலம் KVB வாடிக்கையாளராகி பயன்பெறுங்கள்.**

*சென்னையிலுள்ள எமது ''இன்டர் நேஷனல் டிவிஷன்'' அளிக்கும் அன்னியச் செலாவணி தொழில் நுட்பம் *கரூர் நகரிலுள்ள எமது ''இண்டஸ்ட்ரியல் பைனான்ஸ் செல்'' முதலியவற்றின் நன்மைகளையும் வசதிகளையும் பெற்று பயனடையுங்கள்.

கிளைவிருக்கட்டும்: எமது வங்கியிலுள்ள உங்கள் சேமிப்பு கணக்குகள் மற்றும் லாக்கர்களில் உள்ள பொருட்கள் தொடர்பாக வேறு நபரை 'நாமினேஷன்' செய்திடும் வசதியை நீங்கள் இப்போது பயன்படுத்தலாம்.

---

**சேமிப்பு மாத விழா—**
**1-10-86 முதல் 31-10-86**

---

மக்கள் சேவையில்
**70** ஆண்டுகள்



## கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்

பதிவு & மத்திய அலுவலகம்:
ஈரோடு ரோடு, கரூர்-639 002
சேர்மன்: K.N. புஜங்க ராவ்

**பெருமை மிகு மரபு - அத்துடன் புதுமை மிகு கண்ணோட்டம்**

சேக்கிழார்.

இன்னும் கூடச் சேவல் எங்கோ கூவிக் கொண்டுதானிருந்தது.

'வைகறை முற்றாக இந்த நேரத்தில் எப்போதுமே குலோத்துங்கன் வருகை தந்ததில்லையே!' என்று 'வியந்து வரவேற்கிறார் சேக்கிழார்.

"சேக்கிழார் பெருமானே! புறப்படுங்கள்; தயவு செய்து என் பொருட்டு உடனே புறப்படுங்கள்!"

கொஞ்சமும் பதறாமல் கவனிக்கிறார்.

"என்ன சோழமன்னா! ஜோதிக்கு உடல் நலம் சரியில்லையா?"

சேக்கிழார் இந்தச் செய்தியை அறிந்திருக்கிறார்; அறிந்தும் பதறாமல் கேட்கிறாரே?

"ஆமாம், சேக்கிழாரே! அவள் உங்களைக் காண இரு தினங்களாகவே துடிக்கிறாள். வல்லரசியின்மூலம் செய்தியனுப்பினால் தாங்கள் வரமாட்டீர்கள் என்பதால் நானே செய்தி கொண்டு வந்தேன்!"

"நினைத்தேன்; பகல் வருகிறேன்."

"இப்போது புறப்பட்டால் நன்றாக இருக்கும்.

"பகல் வந்து பார்ப்பதுதான் நலம்."

"நல்லது சேக்கிழாரே! நானே வந்து அழைத்துச் செல்கிறேன்."

"காதலிக்காகக் காதலன் தூது நடந்தான் என்கிற கசப்பான செய்தி பரவக்கூடாது. நானே சென்று கவனிக்கிறேன்!"

காதலி... காதலன்...

குலோத்துங்கன் குலைந்த நெஞ்சுடன் விடைபெற்றுச் சென்றான். இதற்கு இன்று ஒரு முடிவு கண்டாக வேண்டும் என்கிற தீவிரமும் விசுவரூபம் கண்டது.

சேக்கிழார் பலகணங்கள் இமைமூடி பெருமூச்செறிகிறார்!

ஜல்...!

ஜோதியின் நடனஒலியோ! அந்தஜோதீஸ்வரனின் சிலம்பொலியோ?

புரட்டாசி மாத உச்சிச் சூரியன் பொன் னுருகக் காய்ந்து கொண்டிருக்கிறான்...

மாண்புமிகு முதலமைச்சர் தமது பொற் பல்லக்கில் ஜோதி மாளிகை நோக்கிப் பயணமாகிறார்.

இரண்டே காவல் வீரர்கள் முன்னும் பின்னுமாகப் புரவிகளில்.

மாளிகையை அடைந்ததும் வரவேற்றவன் குலோத்துங்கன்.

சேக்கிழார் கண்கள் குலோத்துங்களைக் கூர்ந்து நோக்குகின்றன.

"சோழ மன்னா! நான் ஜோதியோடு தனித்துப் பேச வேண்டும்!"

"ஆகா! அதை எண்ணிக் காவல் நிற்கத் தானே நான் காத்திருப்பது?"

காவல் நிற்க... காத்திருப்பது... என்ன பேச்சு இது?

சேக்கிழார் உள்ளே நுழைகிறார்.

(தொடரும்)

---

அருள்வாக்கு



ஞான வாசல் கதவு திறந்து உண்மையைக் காண்பது மநுஷ்ய ப்ராணி ஒன்றுக்குத் தான் உரியது என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ப்ராணி வர்க்கங்களில் மநுஷ்யன் ஒருத்தன்தான் தன்னையே பரப்ரஹ்மமாகத் தெரிந்து கொள்கிற ஞானத்துக்கு முயல முடியுமென்பதால்தான் "அரிது அரிது மானுடராய்ப் பிறத்தலரிது" என்று சொன்னது. இதையேதான் ஆசார்யாளும் "விவேக சூடாமணியில் "ஜந்து நராஜந்மதுர்லபம்" என்றார்.

இதனால் மநுஷ்ய ஜன்மா எடுத்தவல்லாரும் சற்றேனும் ஆத்ம விசாரம் செய்து ஞானத்தை அடைவதற்கு ப்ரயத்னம் பண்ண வேண்டும்.

இதற்குப் பொழுது கிடைக்கவில்லை என்று சொல்வது கொஞ்சம் கூட ஸரியில்லை. "ரொம்பவும் தற்காலிகமான ஸந்தோஷங்களை உத்தேசித்தே செய்கின்ற ஸகல காரியங்களையும் பண்ணப் பொழுது இருக்கிறது; எது சாச்வதமான ஆனந்தமோ, ஸௌக்யமோ அதற்கு ப்ரயத்னம் பண்ணப் பொழுது இல்லை" என்று சொன்னால் நம்மைப் போல அசடு இல்லை என்றுதான் அர்த்தம்.

மாயை, இயற்கை, nature மனஸ் என்று தினுஸா தினுஸாக இத்தனையை வைத்து பகவான் லீலை செய்கிறது எதற்காக? இவற்றைக் கொண்டு செய்கிற காரியங்களைக் கொண்டே இவற்றுக்கு அப்பாற்பட்ட ஸதானந்தத்துக்கு நாம் வழிதேடிக் கொள்கிறோமா என்று பரீக்ஷை பார்க்கிறதற்காகத்தான். ஆகையால் கர்மா கழிகிற வரையிலே இந்த லோகத்திலே நாம் கடமைகளை, கர்மாக்களை அநுஷ்டானம் பண்ணிக் கொண்டிருக்கவேண்டியதுதான். இதிலே தாம்பத்யம், சாப்பிடுகிறது, பொழுது போக்குகளை ரஸிக்கிறது எல்லாங்கூட அடக்கந்தான். வரம்பு மீறாமலிருக்கிற வரை எதுவுமே அந்தந்த வயஸுக்கட்டம், வாழ்க்கை நிலைகளில் தள்ளுபடியில்லை. எல்லாம் நாம் பக்குவமாவதற்குப் படிப்படியாக உதவி செய்கிறவைதான்.

ஆனால் இதுகளோடேயே நின்றுவிட்டு, ஆத்ம சிந்தனைக்குப் பொழுதே இல்லை என்றால் — நாம் எத்தனை பி. ஏ., எம். ஏ. படித்திருந்தாலும், டாக்டர் பட்டம் வாங்கியிருந்தாலும் அசடு என்றுதான் அர்த்தம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கீ வாங்குவீர்.
ஸின்த்தால் இலவசம்
பெறுவீர்!




கையிருப்பு உள்ள வரையே !

மூன்று பேர் மட்டும்தான் உட்கார்ந்திருந்தோம். நான், ஒரு வயது முதிர்ந்த மெடிகல் ரெப்ரஸென்டேடிவ். ஸ்டூலின் மீது உட்கார்ந்திருந்த அட்டெண்டர் பையன். மற்றபடி விஸிட்டர்ஸ் பெஞ்ச் காலி.

நான் இங்கே வரும்போது மணி பன்னிரண்டரை. அப்போதே மெடிகல் ரெப்ரஸென்டேடிவ் உட்கார்ந்திருந்தார். நுழைகிற சமயத்தில் நாலைந்து நோயாளிகள்தான் இருந்தார்கள். கடைசி நோயாளி டாக்டர் அறைக்குள் நுழையும் போது சரியாக மணி 12.55. ஏறக்குறைய நாற்பது நிமிஷம்.

என் வேலை மணி பார்ப்பதல்ல. ஸர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ், புதிதாக அறிமுகம் செய்யப்பட்டிருக்கிற ஆஸ்பத்திரி சாமான்கள் என்று ஐஸ் வைத்து, சோப் போட்டுத் தள்ளப்பட வேண்டிய பொருள்களின் ஏரியா ஸேல்ஸ்மேன் வேலை.

எனினும் காலம் ஒரு முக்கியமான யூனிட். இந்த டாக்டர் பெரிய புள்ளி என்றார்கள். அஞ்சாறு நோட்டுக்கு ஆர்டர் வாங்கி விடலாம் என்ற ஆசையில்தான் நாற்பது நிமிஷமாகக் காத்துக் கொண்டிருக்கிறேன்.

டாக்டர் இரண்டு மணிக்கு விட்டால் இரண்டே கால் இரண்டரைக்குள் 'லஞ்ச்' முடித்துக் கொண்டு டாக்ஸி பிடித்து பஸ் ஸ்டாண்ட் போய் விடலாம் என்ற நப்பாசையோடு உட்கார்ந்திருக்கிறேன்.

இந்த வார ஷெட்யூல்படி டி. வி. மலை, வேலூர் முடித்தாக வேண்டும். போன சனிக்கிழமை கடலூர். ஹெல் ஆஃப் எ ஜாப். பைசா போணியாகவில்லை. என்னுடைய ஏரியா பெரிசு. நார்த், சவுத் என்று இரண்டு ஆற்காடும் பார்க்க வேண்டும்.

நான் 'மெடிகல் ரெப்'பைப் பார்த்தேன். பொறாமையாக இருந்தது. அவர்களுக்கெல்லாம் இவ்வளவு பெரிய ஏரியா இருக்காது. என் மாதிரி ஊர் ஊராக ராட்சஸப் பாய்ச்சல் பாய்கிற மாதிரி ஓடத் தேவையில்லை.

நான் பார்ப்பதை அவர் கவனித்து விட்டார்.

சிநேகிதமில்லாமல் ஒரு புன்முறுவல் செய்தார். மெகானிகல். வரும் போதே கவனித்தேன். என் வருகையை அவர் ரசிக்கவில்லை. மனத்திற்குள் தோள்களை உலுக்கிக் கொண்டேன்.

ஒரு ஸேல்ஸ்மேனின் வருகையை இன்றைய பொருளாதாரத்தில் யார் ரசிக்கப் போகிறார்கள்? குறிப்பாக இன்னொரு ஸேல்ஸ்மேன்! ஓய் ஷுட் ஐ கேர்?

ஜூலை பதினேழில் எனது கால்நூற்றாண்டு முடிந்து விட்டது. பாரத தேசத்திலுள்ள சகல பாங்குகளும் என் சேவையை நிராகரித்து விட்டன. இரண்டு முறை க்ரூப் ஒன். இரண்டு முறை ஐ. ஏ. எஸ். எழுதிப் பார்த்து விட்டேன். 'எனது அன்பான முதிய மருத்துவப் பிரதிநிதி அவர்களே... இன்னும் ஒரு வருஷம் கழிந்து விட்டால் நீங்கள் என்னை ரசிக்காததைக் கண்டு கொள்ள மாட்டேன்.

பையன் ஊர் ஊராக லாட்ஜுகளில் தங்கிக் கொண்டிருக்கிறான் என்று வீட்டில் பெண் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தத் தைக்கு மேல் தாங்காது. அப்புறம்... உங்கள் மாதிரியே சாயம் மங்கிய பாண்ட்... தொந்தி... சந்தேகப் பார்வை... கொஞ்சம் வயசானால் இதே மாதிரி சோடா பாட்டில் மூக்குக் கண்ணாடி. இதே மாதிரி இரைக்கு அலைகின்ற சந்தேகம் மிக்க தீவிரம். எல்லாம் வந்துவிடும்.

பை காட்ஸ் க்ரேஸ்... ஓ. என். ஜி. ஸி. எழுதியிருக்கிறேனே அதில் என் ஸ்டார் ஜொலித்து விட்டால் இந்த ரெப்ரஸென்டேடிவ் பையை மவுண்ட் ரோட் அண்ணா ஸ்கொயரில் ஆகாசத்தில் தூக்கித்தூக்கிப் போட்டுக்காட்ச் பிடித்துவிட்டு எங்கள் எஸ். பி. டி. (ஸேல்ஸ் ப்ரமோஷன் டைரக்டர்) யிடம் கனகம்பீரமாக நடந்து சென்று கைகுலுக்கி விட்டு விடைபெறுவேன்.

மிஸ்டர் மெடி ரெப்! ஐ வில் மிஸ் யூ இன் தி ஸ்கை. ஹலோ, பை த பை... உமக்கு எத்தனை பொண்ணு?''

கடைசி பேஷண்ட் போன முதல் பத்து நிமிஷம் என் மனசு பாட்டுக்கு இப்படி 'ஸ்கிப்பிங்' ஆடிக் கொண்டிருந்தது.

மெடி—ரெப், 'எப்ஸம்ஸால்ட்' சாப்பிட்ட மாதிரி என்னை ஒருமுறை பார்த்தார். அட்டெண்டர் பையனை ஒரு முறை பார்த்தார்.

''ரொம்ப நேரமாறதே!'' என்று இருவருக்கும் பொதுவாக முனகினார். நான் அந்தப் புகார் அட்டெண்டருக்காக என்று ஒதுங்கிக் கொண்டேன். அந்த அட்டெண்டரும் அதை ஏற்றுக் கொண்டான்.

''உள்ளே போனவர் முனிசிபல் சேர்மன்.''

''வர நேரமாகும்னு சொல்லு.''

''சொல்ல முடியாது.''

# ஓட்டங்களும் இலக்குகளும்.

''டாக்டர் எத்தனை மணிக்கு சாப்பிடப் போவார்?''

சாப்பாட்டு நேரத்தில் இவர் வந்து மாட்டியது இதுதான் முதல் முறை என்பதை ஊர்ஜிதம் செய்து கொண்டேன். அடுத்த ஊர்ஜிதம் இவரும் இன்னும் சாப்பிடவில்லை என்பது. பாவம், வயசானவர். வீட்டிலே இருந்திருந்தால் இந்நேரம் சாப்பிட்டு விட்டு சின்னதா ஒரு குட்டித் தூக்கம் போட்டிருப்பார்.

''கரெக்டா ரெண்டுக்குக் கௌம்பிடுவார்!''

''ரெண்டு வரையிலும் இருப்பாரா?''

கேட்கிற கேள்வியைப் பார்த்தால் வெளியே போய் லஞ்ச் முடித்துக் கொண்டு வருவார் போல் தோன்றியது. எனக்கு மனசு இளகிவிட்டது. எவ்வளவு பசியோ? மனுஷன் என்னைப் பார்த்துச் சிநேகிதமாகப் புன்னகை செய்யா விட்டால் போகிறார். இந்த வயசான காலத்திலே ஸாம்பிள் சுமை தூக்கிக்கிட்டு அலையற சிரமத்துக்கு டயத்திலே சாப்பிட வேண்டாமோ!

மெடி ரெப் என்னை மீண்டும் திரும்பிப் பார்த்தார். என் பரிவை மனத்திற்குள் ஒரு ஜிப் போட்டு மூடிவிட்டு, விஸிட்டர்ஸ் பெஞ்ச் கடந்து நீண்ட ஆளோடிக்கப்புறம் தெரிகிற, இந்த டிஸ்பென்ஸரியை ஒட்டிய, ஸைட் விண்டோ திறந்த வெற்றிலே பாக்குக் கடையைக் கவனித்தேன். கலர் கலராக பானங்கள் நிரம்பிய புட்டிகள் தெரிந்தன. எனக்கு தாகமெடுத்தது.

''நீங்களும் மெடிக்கலா?'' என்றார் அவர்.

நான் திரும்பினேன். ''இல்லே... ஸர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ்.

## வையவன்

என் பதில் அவர் முக இறுக்கத்தைத் தளர்த்திப் புன்னகையை சிநேகபூர்வமாக்கியது. நான் போட்டியில்லே.

''எந்தக் கம்பெனி?''

''ஸ்மித் டேல். நீங்க?''

''ப்ளாக் ஷிப்.''

''க்ளாட் டு மீட் யூ... ஐ ஆம் சுரேஷ்''

''நான் சுதர்சனம்'' என்றார் அவர். பரஸ்பரம் கைகுலுக்கினோம்.

''ரொம்ப சர்வீஸ் போலிருக்கே?'' என்றேன்.

''ஸில்வர் ஜூபிலி ஆயிடுத்து.''

ஒரு மனிதன் தனக்குப் போட்டியல்ல என்று தீர்மானமாகும்போதுதான் இப்போதெல்லாம் மற்றொரு மனிதனின் பூட்டுக்கள் திறக்கின்றன. சுதர்சனம் வெள்ளையாகச் சிரித்தார். ஹவ் நைஸ்! ஒரு நிமிஷத்துக்கு முன்னடி இவரால் இவ்வளவு ஆத்மார்த்தமாக நிர்மலமாகச் சிரிக்க முடியும் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

''சேர்மன் உள்ளே போயிருக்கார்! எப்ப வர்றாரோ?''

''போன கவுன்சில்லே நடந்ததையெல்லாம் விளக்கமாக வர்ணித்துக் கொண்டிருப்பார்'' அட்டெண்டர் பையனுக்காக நான் ஆங்கிலத்துக்குத் தாவினேன்.

சுதர்சனம் ரொம்ப 'ரிஸப்டிவ்' ஆன மனுஷன்தான். அனுபவித்துச் சிரித்தார். பசி நேரத்தில் அவரைச் சிரிக்க வைக்க முடிந்ததற்காக நான் சந்தோஷப்பட்டேன். இது போதும். பிஸினஸில் தொடர்ந்து ஜோக்



அடிப்பது தகாது.

"அவர் எப்போ வந்தா என்ன? நீங்க மொதல். ஐ வில் வெய்ட்" டேக்யுவர் ஒன் டைம்" என்று அவருக்கு ஒரு சலுகை 'வெய்ட்டேஜ்' கொடுத்தேன். சுதர்சனம் பரிபூரணமாக நிராகரித்தார்.

"ரொம்ப தாகமா இருக்கு."

"எனக்குந்தான்!"

அட்டெண்டர் பையன் தண்ணீர் வேண்டும் என்று நாங்கள் கேட்போம் என எதிர்பார்த்த பாணியில் பார்த்தான். நான் சுதர்சனத்திடம் ஒரு மாற்று யோசனை சொன்னேன்.

"தோ. வெளியிலே ஒரு பங்க் கடை இருக்கே. போய் ஏதாவது ஒரு 'டிரிங்க்' குடிச்சுட்டு வருவோமா?"

"அதுக்குள்ளாற சேர்மன் வந்துட்டா?" என்று சந்தேகப்பட்டார்.

"டவ்ட்ஃபுல். இப்பத்தான் பாதி கவுன்சில் மீட்டிங் ஆயிருக்கும்."

அவர் சிரிப்பை அடக்கிக் கொண்டு எழுந்தார். அவர்தான் முதலில் நடந்தார். கூடுமான வரை வேகம். மீண்டும் எனக்கு அந்த வேகம் மனத்தை நெருடிற்று. இரண்டு கோல்ட் ஸ்பாட். நான்தான் சில்லறை கொடுத்தேன். அவர் முயற்சி பலிக்கவில்லை.

குடித்து முடித்த பிறகுதான் அது ஆரம்பமாகியிருக்க வேண்டும். அவர் அப்போதே மார்பை லேசாகத் தடவிக் கொண்டார். நான் அதை ஸீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை.

"ப்ளாக் ஷிப்ல சமீபத்திலே ஒரு இண்டர்வியூ நடந்ததில்லே?"

"ஆமாம்."

"என் ப்ரண்ட் ஒருத்தன் அதிலே கலந்துண்டான்!"

டைப்ரைட்டிங் மெஷினுக்குக் 'கவர்' போட்டு மூடிய மாதிரி சுதர்சனம் முகம் மாறிவிட்டது. மனுஷன் மறுபடியும் பூட்டிக் கொண்டு விட்டார்.

"என்ன பேரு?"

"நிர்மல்குமார்."

"சேப்பா... ஒரு ஸ்போர்ட்ஸ்மன் பாடியோட சுருட்டை முடியா."

"எக்ஸாக்ட்லி. அவனேதான்!"

அவர் முகம் ஸ்பஷ்டமாக மாறி விட்டது. கொஞ்சம் திருதிருவென்று ஒரு முழி.

"ஒங்க ஏரியா நார்த் ஆற்காட்டா ஸார்?" என்றேன்.

"ஏன்... ஏன்... ஏன் கேக்கறீங்க?" என்று அவர் பதறினார்.

"ஒண்ணுமில்லே. அவன் நார்த் ஆற்காட் தான் கெடைக்கும்கிற மாதிரி சொன்னான்."

"அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டர் வந்துடுத்தா?" என்று பதற்றம் தணியாமல் கேட்டார் சுதர்சனம்.

"ரெண்டு மூணு மாசம் ஆகும்னான். வெயிட்டிங் லிஸ்ட்ல வச்சிருக்காங்களாம்."

சுதர்சனம் இப்போது என் தோள்மேல் கைபோட்டார்.






# நரசுஸ் காபியின் வைர விழா வெகுமதிகள்!











- 12 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் பிளேட்.
- 10 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டபரா செட்.
- 5 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் 'ஆனந்த்' டம்ளர்.
- $1\frac{1}{2}$ கிலோ நரசுஸ் காபிக்கு துணிப்பை.
- 500 கிராம் நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் ஸ்பூன்.

மொத்தமாகவோ, சில்லரையாகவோ, வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று, வெகுமதிகளைப் பெறுங்கள். 29.9.86 முதல் 31.10.86ல் முடியும் விற்பனைக்கே வெகுமதிகள் உரியவை.

ஜீவனுள்ள ஒரே காபி

## நரசுஸ் காபி



**நரசுஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007
கிளைகள்: தமிழகம் மற்றும் பாண்டிச்சேரியிலும்.

ADWAVE/NCC/3193

''மிஸ்டர் சுரேஷ்! ஒங்க 'ப்ரெண்ட்' ரொம்ப சூட்டிகையான ஆள். இதில வந்து ஏன் மாட்டறுர். நெறையஸ்போர்ட்ஸ் அண்ட் கேம்ஸ் சர்ட்டிபிகேட்டெல்லாம் வச்சிருந்தாரே.''

''ஆமாம்... எங்கெங்கேயோ அப்ளை பண்ணியிருக்கான் சார்... சும்மா ஒரு 'டைம் கேப்' புக்காகத்தான் வர்றுன்.''

சுதர்சனத்தின் கை என் தோள் மேலிருந்து நகர்ந்து என் இடது கையை மெதுவாகப் பற்றியது.

''இந்த வேலை லோலோன்னு வெயில் மழை பார்க்காமே, நாய் மாதிரி ஊர் ஊரா அலையற வேலை. மோர் ஓவர் ஆல் தி டாக்டர்ஸ் ஆர் ஸ்ட்ரேன்ஜ். எவ்வளவு கமிஷன் கொடுத்தாலும் திருப்தியில்லே. இந்தக் கம்பெனிக்கு இதயமே கெடையாது சார்.''

என் நாக்கு துறுதுறுத்துவிட்டது.

''கம்பெனிக்கு எப்படி சார் இதயம் இருக்கும்?''

சுதர்சனம் நான் கொடுத்த 'கட்'டைச் சாதகமாக்கிக் கொண்டு தொடர்ந்தார்.

''கரெக்ட்... கரெக்ட்... யூ ஸீ... இருபத்தி அஞ்சு வருஷம் ரத்தத்தையும் வேர்வையையும் ஊத்தி ஒழைச்சிருக்கேன்.. தே ஹாவ் நாட் ப்ரமோடட் மீ. இன்னும் ரிடயர்மெண்டுக்கு ரெண்டு வருஷம் இருக்கு. இப்பவே வாலண்டரி ரிடயர்மெண்ட் குடுக்கச் சொல்லி ப்ரஷர்ஸ்...''

நான் அவர் அங்கலாய்ப்பைப் பரிதாபத்தோடு கேட்டேன். அவர் ஒருமுறையும் நான் ஒரு முறையும் சேர்மன் வெளியே வந்துவிட்டாரா என்று உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டோம்.

''நான் குடுத்துடுவேன் ஸார்! இன்னும் ஒரு பொண்ணு இருக்கு. மத்ததெல்லாம் 'டிஸ்போஸ்' ஆய்ட்டது. ஒண்ணே ஒண்ணு. வேலையிலே இருக்கறச்சே யேவர்றவரெல்லாம் கீழ்ப்பார்வை பார்த்துண்டு வர்றது! 'ரிடயர்' ஆய்ட்டா கேக்கவே வேண்டாம். ஜஸ்ட் பல்லைக் கடிச்சுண்டு அந்தப் பொண்ணு போற வரைக்கும் இருந்துடணும்னு பார்க்கறேன்.''

அவர் சுயசரிதையை நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. இது ஏன் என்னிடம் சொல்லப்படுகிறது என்று சந்தேகப்படும் போது, அவர் இரண்டாம் முறை மார்பைத் தடவினுர். அப்போது அது தீவிரமடைந்திருக்கக் கூடும். அங்கும் அதை நான் ஊகிக்கத் தவறி விட்டேன்.

''எதுக்குச் சொல்றேன்னு...?'' என்று மிஸ்டர் சுதர்சனம் ஒரு முறை இழுத்ததும் பளிச்சென்று விஷயம் புரிந்தது. எனது நண்பன் நிர்மல்குமாரை இவர் வேறு வேலை தேடிக் கொள்ளச் சொல்கிறுர். குறைந்த பட்சம் இவர் கடைசிப் பெண்ணுக்குக் கல்யாணம் ஆகும் வரை இவர் ஸ்தானத்தில் ஊடுருவ வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறுர்.

''நீங்களும் ஸேல்ஸ்மேன். உங்க கம்பெனி ஸ்மத்டேல் அற்புதமான கம்பெனி சார்!

ஜெனரஸ் பீப்பிள். கேள்விப்பட்டிருக் கேன்!''

நான் உள்ளுக்குள் சிரித்துக் கொண் டேன். நிர்மல்குமாரை இவர் ஸ்மித்டேலுக்கு விண்ணப்பிக்கச் சொல்கிறாரா?

இவரைப் பார்க்க எனக்குக் கூச்சமாக வந்தது. இருபத்தைந்து வருஷம் ஓடியாடி மருந்து விற்கிற இந்த மனிதருக்குத் தம் அச் சத்தைஇப்படி வெளிப்படையாகஒரு டாக்டர் இல்லாமல் எப்படி வெளிப்படுத்த முடி கிறது? ஸேல்ஸ்மன்ஷிப் எவ்வளவு நவீனமாகி விட்டிருக்கிறது இப்போது! பிஸினஸ் சைக் காலஜியே இவருக்குத் தெரியாது என்று தோன்றியது.

இவர் கம்பெனி — அந்த 'ப்ளாக் ஷீப்' இவரை மூட்டை கட்டத் துடிப்பது நியாயம் என்று பட்டது. யூ ஸீ... கம்பெனி எதற்கு சார் வச்சிருக்கான்? சுறுசுறுன்னு அவன் 'ப்ராடக்ட்' விக்கத்தான். அதுவும் மெடிகல் கம்பெனிகளிலேயோ... மை காட்... போட்டி ஜெட் வேகத்திலே போயிண்டிருக்கு.''

ஹெல் வித் யூ மிஸ்டர் சுதர்சனம்! உம்ம கடைசிப் பொண்ணுக்குக் கல்யாணம் ஆகிற வரைக்கும் நார்த் ஆற்காட் ஸேல்ஸ் காத்திருக் கணும்னு 'ப்ளாக் — ஷீப்' பொறுத்திருக் குமா? ராட் ரேஸ் ஸார்... ராட் ரேஸ்!

கொஞ்சம் நிர்மல்குமாரிடம் சொல்லி ஊடுருவி விடாமல் ஒதுங்கிக் கொள்ளுமாறு எங்கே என்னைக் கேட்டு விடுவாரோ என்று எனக்குக் கவலையாக வந்தது.

இப்போது அவர் முகத்தில் லேசாக வியர்வை.

அந்த வியர்வையைப் பார்க்கும் போது என் பயம் கவலை எல்லாம் பின்வாங்கி விட் டது. கொஞ்சம் இரக்கம் வந்தது.

மிஸ்டர் சுதர்சனம்கூட ஒரு 'ராட் ரேஸில்' ஈடுபட்டிருக்கிறார். இவருடைய வின்னிங் போஸ்ட் கடைசிப் பெண் கல்யாணம். கையில் ஒரு ரெப்ரஸென்டேடிவ் பையுடன் அதற்குத்தான் இவர் இந்த ஓட்டம் ஓடி இப்படி வியர்த்துக் கொண்டு நிற்கிறார்.

''தோ சேர்மன் வந்துட்டார் சார்!'' என்று இரண்டாவது முறை எட்டிப் பார்த்த சுதர்சனம் ஒரு துடிப்போடு சொல்லி விட்டு வேகமாக உள்ளே ஓட்டமும் நடையுமாக நுழைந்தார்.

நான் நிதானமாகப் பின் தொடர்ந்தேன்.

டாக்டர் அறையின் 'புஷ்டோரை' மிஸ்டர் சுதர்சனம் தள்ளிய போதோ அல்லது அதற்கு முன்பாகவோ எப்போது அது நடந்தது என்பதை என்னால் இன்னும் நிதானிக்க முடியவில்லை. ஸ்டூலில் உட்கார்ந்திருந்த அட்டெண்டர் பையன் திடுக்கிட்டு எழுந்து நின்று விட்டான்.

மிஸ்டர் சுதர்சனம் ஒரு கையில் தமது ரெப்ரஸென்டேடிவ் பேக்கோடு ஒரு கை டாக்டரின் அறைக் கதவைத் தள்ளியபடி நிற்க நெடுஞ்சாண் கிடையாகக் குப்புற விழுந்து விட்டார்.

அவர் விழுந்த சத்தம் கேட்டுவிட்டு ''என்ன... என்ன...?'' என்று பதறிக் கொண்டு வெளியே வந்த டாக்டர் தமது அறைக் கதவை முழுக்கத் திறக்க உள்ளே இழுத்த போதுதான் கதவின் கைப்பிடியைப் பிடித்திருந்த சுதர்சனத்தின் கை தரையில் விழுந்தது.

வெளியே வந்த டாக்டர் கதவை உடனே மூடவிடாமல் தள்ளிக் கொண்டு ''அந்தக் கையை மடக்கு மேன்!'' என்று அட்டெண்டர் பையனைப் பார்த்துச் சீறினார்.

ஐந்து நிமிஷத்திற்குள் நானும் அட்டெண் டரும் சுதர்சனத்தைப் புரட்டி டாக்டர் அறைக்குள்ளிருந்த 'கன்ஸல்டிங் — பெட்' டில் கொண்டு போய்க் கிடத்தினோம்.

''இவர் ஷர்ட்டையெல்லாம் லூஸ் பண் ணுங்க. கேசவா அந்த ஃபேனைப் போடு. என்னமா வியர்த்திருக்கு! ஐ திங்க் திஸ் ஈஸ் எ ஸ்ட்ரோக்!''

டாக்டர் விறுவிறுவென்று தம் நாற்காலி யருகே போய் ஸ்டெத்தை மாட்டிக் கொண்டு வந்து அவரைப் பரிசோதித்தார். ரப்பர்ப் பட்டையை சுதர்சனம் கையில் சுற்றிவிட்டு 'ப்ரஷர்' பார்த்தார்.

''லோ பி. பி... மைகுட்னஸ் எய்ட்டிதான் இருக்கு... மிஸ்டர்...?'' என்று என்னைப் பார்த்தார் டாக்டர்.

''ஐ ஆம் சுரேஷ் ஃப்ரம் ஸ்மித் டேல் ஸர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் அண்ட் ஹாஸ்பிடல் அக்ஸெஸரீஸ்.''

''ஓ. கே... இவர் கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி ஏதாவது 'ஹெல்த் கம்ப்ளெ யிண்ட்ஸ்' சொன்னாரா?''

''ஒண்ணும் சொல்லே ஸார்! ரெண்டு பேரும் இப்பத்தான் ஒரு கூல் ட்ரிங்க் சாப் பிட்டோம். தென்.... தென்....'' என்ற பிறகு தான் எனக்குச் சட்டென்று ஞாபகம் வந்தது.

''அவர் மார்பை ரெண்டு தரம் தடவி விட்டார் சார்.''

''தேர் இட் ஈஸ்.... புவர் ஓல்ட் சாப்! இந்த வயசிலே இவருக்கு என்னத்துக்கு இந்த ஓவர் 'ஸ்ட்ரெய்ன்' எல்லாம்?''

டாக்டரின் ஸிரிஞ்சில் இரண்டு முறை வெவ்வேறு வண்ணமுள்ள இரண்டு திரவங் கள் ஏறின. மிஸ்டர் சுதர்சனத்தின் வலது புஜத்தில் ஒன்றும் இடது புஜத்தில் ஒன்று மாக இரண்டு இஞ்செக்ஷன்.

சுதர்சனம் தம் சுயநினைவிற்குப் பூரண மாகத்திரும்பிவிட்டார். என்னையும் டாக்டரை யும் மாறி மாறிப் பார்த்தார். அவர் பார்வை யில் ஸம்திங் எதுவோ 'கில்ட்டி'யாக, என்னைக் காட்டிக் கொடுத்து விடாதீர்கள் என்று கெஞ்சுவதாக ஒரு தவிப்பு.

''டாக்டர்.... ப்ளீஸ் இப்படி நான் மயங்கி விழுந்துட்டேன்னு யார்ட்டேயும் சொல்லா தீங்க. விஷயம் கம்பெனிக்குப் போயிடும். யூ ஸீ... என் ரிடயர்மெண்ட்டுக்கு இன்னும் ரெண்டு வருஷம் இருக்கு'' என்றார் சுதர் சனம். டாக்டரின் முகம் சுருங்கிற்று.

# காலைப் புதுமை மாலைவரை நீடிக்கச் செய்யுங்கள்!

புதியது







உண்மையான புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் குறைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸின்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸின்த்தாலில் உள்ளது.

**மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும கிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.**

**ஸின்த்தால்** மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.

Godrej
நம்பிக்கை

# தேவை அறிந்து
# நீங்கள் கொடுப்பதுபோல
# தரம் அறிந்து
# நாங்கள் கொடுக்கிறோம்.

மிகச் சிறந்த பாத்திரங்கள்,
சேலம் ஸ்டீல்
தகடுகளாலும் காயில்களாலும்
தயாரிக்கப்படுகிறது.

சேலம் ஸ்டீல். எங்களின் தட்டு கூட உலகம் அளவு விஷயத்தை உள்ளடக்கியது. கண்ணால் காண முடியாத பல இரகசியங்கள் அதிலே மின்னும்—மலரின் மணத்தைப்போல. எனவே நாங்கள் சிறந்ததையே நாடுகிறோம். மூலப்பொருளிலும்—தொழில் நுட்பத்திலும். சின்னச்சின்ன விஷயத்தில்கூட வெகு நுட்பமாக கவனம் செலுத்துகிறோம். ஒவ்வொரு கட்டத்திலும் மிகவும் நுண்ணிய பரிசோதனைக்கு உட்படுவதால் தரம் அங்கே மின்னுகிறது.

கண்ணுக்குத் தெரியாத பல இரகசியங்கள் ஒரு தட்டில் அடங்கி இருப்பது இப்போது நன்றாகப் புரியும். இது எங்கள் நிறுவனத்தின் கொள்கைக்கு ஆதாரமான எடுத்துக்காட்டு. எங்களின் தர கவனம் . . . உங்களின் பராமரிப்பு போல.



**சேலம் உருக்காலை**
சேலம் 636 013 தமிழ்நாடு
ஸ்டீல் அதாரிட்டி ஆஃப் இந்தியா லிமிடெட்
ஒரு இந்திய அரசு நிறுவனம்

## சேலம் எவர்சில்வர்.

**கேட்டு வாங்குங்கள். எங்களின் தரமே எல்லை! எவரும் இதுவரை தந்ததே இல்லை!**

Sista's – SSP.558.86 TM C

## பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

**11**

**வா**சலில் ஜீப் சத்தம் மற்றும் பூட்ஸ் சத்தங்கள் கேட்டு எழுந்த பரத் திரும்பி அசோக்கைப் பார்த்தான்.

''சார் போலீஸ்! எனக்காகத்தான் வந்திருக்கணும். ப்ளீஸ், என்னைக் காப்பாத்துங்க, காட்டிக் கொடுத்துடாதீங்க. அவங்ககிட்டே என்னை ஒப்படைச்சிடாதீங்க,'' என்ற அசோக் உடன் மடங்கி விழுந்து பரத்தின் கால்களைப் பிடித்துக் கொண்டான். விழிகளின் கீழுதட்டில் அவசரக் கண்ணீர் தாவி வர தருணம் பார்த்தது.

எதையும் தீர்மானிக்க இயலாமல் தடுமாறின பரத் அழைப்பு மணி ஒலிப்பதைக் கேட்டு, ''வெல், நீங்க அந்த ரூமுக்குள்ளே போய்க் கதவைத் தாழ் போட்டுக்கங்க. நான் கூப்பிட்டதும் வந்தாப் போதும்'' என்று சன்னக் குரலில் சொல்லிவிட்டு, ''சுசி, போய்க் கதவைத் திற'' என்றான்.

நாற்காலியில் அமர்ந்து கைக்கு எட்டின புத்தகம் எடுத்துக் கொண்டு தீவிரமாய்ப் படிப்பவனாய் மாறினான்.

கதவு திறந்த சுசிலா தொப்பியைச் சுழற்றிக் கையில் வைத்திருந்த அந்தக் காக்கி உடை அதிகாரியின் தோளில் நட்சத்திரம் பார்த்து, ''எஸ், இன்ஸ்பெக்டர்'' என்றாள்.

''பரத் இல்லே?''

''இருக்கார்.''

''ஆம் ஐ எ டிஸ்டர்பன்ஸ் நவ்?''

''இல்லே. உள்ளே வாங்க.''

இயல்பாய் நிமிர்ந்த பரத், ''ஹலோ முருகேசன், வாய்யா. எங்கே இந்தப் பக்கம்?'' என்றான் ஆச்சரியமாய்.

முருகேசன் வந்து கைநீட்டி அழுத்தமாய்க் குலுக்கிவிட்டு எதிரே அமர்ந்து, ''ராஜபாளையத்திலேர்ந்து டிரான்ஸ்ஃபர்,'' என்றான்.

''வெரிகுட். மெட்ராசுக்கே வந்துட்டியா?''

''ஆமாம். முந்தா நாள் ஜாய்ன் பண்ணினேன். இன்னிக்குத்தான் டயம் கிடைச்சுது. எப்படி இருக்கே? லேசா தொந்திவந்திருக்கே.. மேடம் அப்புறம் உன்னை ரிஜெக்ட் பண்ணிடப் போறாங்க. என்னைப் பத்திச் சொன்னதே இல்லையா?''

''நிறையச் சொல்லியிருக்கேன். நினைவுபடுத்தணும்னா அந்த நொட்டோரியஸ் சம்பவங்களை லேசா சொல்ல வேண்டியிருக்கும். எப்படி

வசதி? சுசிலா, காலேஜ் அன்னிக்குத் திடீர்னு ஹாலிடே. பொழுது போகலேன்னு என்னை ரத்னான்னு ஒரு பொண்ணு வீட்டுக்கு அழைச்சுட்டுப் போனார் அய்யா.''

''போதும்ப்பா. 'முருகேசன் என்னோட காலேஜ் ஃபிரண்டு' ன்னு அறிமுகப்படுத்தினா போதும். ஷல் வி கோ அவுட் ஃபார் எ கப் ஆஃப் காப்பி?''

"கப் ஆஃப் காஃபி?

''இப்படியெல்லாம் சுசியை இன்சல்ட் பண்ணக்கூடாது. ஏன், இங்கே நல்ல காப்பி கிடைக்காதா? சுசி கேட்டரிங் டெக்னாலஜி படிக்காமலேயே எக்ஸ்பர்ட்.''

''ஐ ஸி.''

சுசிலா வலுக்கட்டாயப் புன்னகையுடன் சமையலறைக்குப் போக, ''சுசியோட ஸ்பெஷல் அயிட்டம் என்ன தெரியுமா? தயிர்! அதைத் தயாரிக்கத்தான் சிரமமே இல்லே'' என்று பரத் சிரித்து, ''எந்த ஸ்டேஷன்?'' என்றான்.

''ஸ்டேஷன் இல்லே. கமிஷனர் ஆஃபீஸ்ல போட்டிருக்காங்க. அட்மினிஸ்ட்ரேஷன் சைடு. நாற்காலி வேலே. எக்ஸ்டன்ஷன் பதினேழைக்கூப்புடு என்னைப் பிடிக்க.''

சுசிலா காப்பியோடு வந்தாள்.

இன்ஸ்பெக்டர் மேலும் பதினைந்து நிமிஷம் பரத்துடன் சில பழைய சுவையான சம்பவங்களைப் பேசிவிட்டுப் புறப்பட்டுப் போய், ஜீப்பின் சத்தம் தேய்ந்ததும், ''ரத்னா யாரு?'' என்றாள் சுசிலா.

''பெரிய கதை சுசி. இப்போ நேரமில்லே. கதவைச் சாத்து. அசோக்கைக் கூப்பிடு.''

முழுக்க வியர்த்துப் போய் வந்த அசோக், ''நான் ரொம்ப பயந்துட்டேன் சார்'' என்று சட்டையின் மேல் பட்டன்கள் இரண்டைக் கழற்றி, காலரைப் பின்னால் தள்ளிக் கொண்டு, பனியனுக்குள் வாயால் காற்று ஊதிக் கொண்டான்.

பரத் ஃபேனின் வேகத்தை அதிகரித்து விட்டு வந்து, ''பரிதாபப் படறதா கோபப் படறதான்னே தெரியலே மிஸ்டர் அசோக். செய்யாத குற்றத்துக்கு விசாரணை நடுவிலே பாதியிலே தப்பி வர்றது தலையாய தப்பு.''

''பரத், திஸ் ஈஸ் நாட் ஃபேர்'' என்றாள் சுசிலா.

''என்ன சொல்றே?''

''அவர்தான் தெளிவா தன்னோட சூழ்நிலேகளைச் சொல்லிட்டாரில்லேயா? இவர்தான் குற்றவாளின்னு தொண்ணூத்தி ஒன்பது சதவீதம் முடிவு செஞ்சி கஸ்டடிக்கு அழைச்சுட்டுப் போற நிலேயிலே வேறே எதுவும் தோணுமே தப்பிச்சுட்டார்.''

''என்ன சுசி பேசறே நீ? இதுவே ஒரு கிரிமினல் குற்றம் தெரியுமா?''

''சரி, யார் இல்லேன்னு சொன்னது? தப்பிச்சி வரக் கூடாதுதான். வந்தாச்சு. தப்பி வடக்குப் பக்கம் ஓடி லட்சம் ஊர்களிலே ஒண்ணிலே சுலபமா காணாமப் போயிட முடியும். செய்யலேயே அப்படி? தன் மேல் பழி நீங்கணும், தான் மறுபடி சுதந்திரமா வாழணும்ங்கிற நேர்மையான தவிப்பிலேதான் இதே மெட்ராஸ்ல இருக்கார்.''

''நீ என்ன அவருக்குச் சிபாரிசு?''

''சிபாரிசு இல்லே, பதற்றத்திலே அவரால் பேச முடியலே. அவரோட பொஸிஷனை நான் உங்களுக்கு விளக்கமா சொல்றேன்.''

''போலீஸ் தேடற ஒரு நபரை ஒருத்தர் மறைச்சு வைக்கக்கூடாது. அதுவும் சட்டம் தெரிஞ்ச லாயர் அதைச் செய்யக்கூடாது.''

''ஸோ?''

பரத் அமைதியாய் அசோக்கைப் பார்த்தான்.

''சொல்லுங்க. அதனால் என்ன செய்யப் போறீங்க?''

''அசோக்கை இன்வெஸ்டிகேடிங் ஆஃபீஸர் முன்னாடி ஆஜர்ப்படுத்த வேண்டியதுதான் முறை.''

''முறை என்னன்னு கேக்கலே. நீங்க என்ன செய்யப் போறீங்க?''

''முறைப்படிதான் செய்யணும்.''

''சபாஷ்! உங்களைப் பெரிய ஆபத்பாந்தவர்ன்னு நம்பி வந்திருக்கிறவருக்கு நீங்க செய்ற மரியாதை ரொம்ப அழகு.''

ஆவேசமாய்ப் பேசும் சுசிலாவை அமைதியாகப் பார்த்தான் பரத்.

''இவர் நிரபராதின்னு உனக்குத் தெரியுமா?'' என்றான் நிதானமாக.

அமைதியாக இருந்த அசோக், ''சார், தயவு செஞ்சி சொல்றேன். அதை மட்டும் சந்தேகப்படாதீங்க. சத்தியமா நான் கொலே செய்யலே'' என்றான் உரக்க.

''நழுவாதீங்க பரத். உங்களுக்கே தெரியும். கண்ணைப் பார்த்துப் பொய்யா, உண்மையான்னு கண்டுபிடிச்சுடுவீங்க நீங்க. மிஸ்டர் அசோக் கண்ணிலே பொய் இல்லேங்கிறதை ஒத்துக்கறீங்களா?''

''யெஸ்.''

''பின்னே என்ன தயக்கம்?''

''எதுக்குத் தயக்கம்னு சொல்றே?''

''காப்பாத்தறதுக்குத்தான்.''

''வாட் டு யூ மீன்? எப்படி?''

''எல்.கே.ஜி.ல ஆரம்பிச்சி பாடம் நடத்தட்டுமா? நடிக்காதீங்க பரத். பொம்பளே கிளேயண்ட் வந்துட்டா உதட்டைத் திறந்து வச்சுக்கிட்டு விருட்டுன்னு கேசிலே இறங்கிடறீங்க.''

''சுசி, இது சிக்கலான விஷயம்.''

''சிக்கல் இல்லாத விஷயத்தைச் சாதிச்சுக் காட்றதிலே சவால் என்ன இருக்கு? ரெண்டு இட்லி சாப்பிடறதா சாதனை? அறுபது இட்லி சாப்பிடறதிலேதானே போட்டி?''

''ஏய், இப்படி வா இங்கே'' என்று தனியாய் அழைத்துச் சென்று, ''எனக்கு இல்லாத அக்கறை உனக்கு என்ன இவன் மேல்?'' என்றான் பரத்.

''பிகாஸ் நான் பெண்.''

''அதனாலே?''

''பிகாஸ் அவன் ஓர் அழகான இளேஞன்.''

''ஸ்டுப்பிட்.''

''சரி. அழகான ஸ்டுப்பிட் இளைஞன்.''

''நான் திட்டினது உன்னை. சுசி, சீரியஸா

சொல்றியா? கைகழுவி விட்டுடலாம்னு நினைச்சேன்.''

''உங்களை எல்லாம் எப்படி பரத் ஜீவ காருண்ய சங்கத்திலே சேர்த்தாங்க?''

அதுக்கும், இதுக்கும் என்ன?''

''ஆறறிவுக்குக் கீழே உள்ள உயிர்களுக்கு மட்டும்தான் இரக்கம் காட்டணுமா? எவ்வளவு இக்கட்டான சூழ்நிலையிலே உங்களைத் தேடி வந்திருக்கார். உதடுகள் பாருங்க எவ்வளவு சிவப்பா இருக்கு?''

''இந்த மாதிரி பின்னணி வச்சுப் பேசினா, உதவலாமான்னு யோசிக்கிறதையே நிறுத்திடுவேன் சுசி.''

''வேணாம். எனக்காக வேணும். இதை ஒரு சேலஞ்ஜா எடுத்துக்கங்களேன். போலீஸ் இவரைச் சந்தேகப்படுது. இவரோ குற்றத்தைச் செய்யலே. உண்மையான குற்றவாளியைக்கண்டுபிடிங்க. இவரைக்காப்பாத்துங்க. மார்புல பாருங்க எவ்வளவு ரோமம்? இந்த வகை ஆண்கள் எப்படிப் பட்டவர்கள் தெரியுமா?''

''ச்சை! கண்ட புஸ்தகமும் படிக்கிறே நீ. இப்போ என்ன? சரி, வா'' என்று மறுபடி ஹாலுக்கு அழைத்து வந்தான் அவளை.

அசோக் அவன் முகத்தையே ஆர்வமாகப் பார்க்க...

''அசோக், இன்னைக்கு மட்டும் நீங்க இங்கேயே தங்கறீங்க. நான் போலீஸ் என்ன கணிக்குது, அவங்க நடவடிக்கைகள் என்னன்னு விசாரிக்கிறேன் முதல்ல. என்னால உங்களுக்கு உதவ முடியும்னு பட்டுச்சின்னா... தீவிரமா உதவுவேன். நீங்க சொன்ன ஸ்டேட்மெண்ட் பொய்யின்னு நான் கண்டுபிடிச்சிட்டா, அந்த நிமிஷமே நானே உங்களை போலீஸ்கிட்டே ஒப்படைச்சுடுவேன். சம்மதமா?''

''சார், இன்னும் என்னை நம்பலையா?''

''இல்லே. ஒரு லாயர் சுலபத்திலே நம்பக் கூடாது. நம்ப மாட்டான். நம்பணும்னு எதிர்பார்க்கவும் கூடாது'' என்று அவன் தோளில் தட்டி, ''ரிலாக்ஸ்'' என்றான் பரத்.

**ஹோ**ண்டா ஸ்கூட்டரின் கார்ப்பரேட்டரை பெட்ரோலில் குளிப்பாட்டிக் கொண்டிருந்தான் சுகுமார். காக்கிப் பேண்ட்டில் அங்கங்கே அழுக்கு மேகங்கள். காற்றில் பெட்ரோல் மணத்தது. ஒரு ஜாவா எலும்புக் கூடாய் ஓரத்தில் நிற்க... பஜாஜ் சேடக் கழுத்தைத் திருப்பிக் கொண்டு பார்த்தது. அரை ட்ரவுசர் பையன்கள் மூன்று பேர் உத்தரவுக்குக் காத்திருந்தனர்.

கடைக்குள்ளே போன் குறைந்த சத்தத்தில் ஒலித்தது.

''யார்னு கேள்டா.''

''அலோ என்னங்க வேணும்? இருக்காருங்க. கூப்புடறேன்.''

பையன் ஓடிவந்து: ''சார், உங்க கூட பேசணுமாம்.''

''யாருன்னு கேக்கலையா?''

''தாமஸ்னு சொன்னாரு.''

சுகுமார் உடனே உள்ளே வந்து ரிசீவரை



எடுத்துக் கொண்டான்.

''தாமஸ், எங்கேர்ந்து பேசறே?''

''மெட்ராஸ்.''

''பாவி, எப்போ வந்தே?''

''அரை மணி நேரம் முன்னாடி.''

''முட்டாள்! திருவனந்தபுரத்தை விட்டு ஏன் புறப்பட்டே. பத்து நாட்கள் கழிச்சுத் தான் ஊர் திரும்பணும்னு சொல்லியிருந் தேனே...''

''நேர்ல சொல்றேன் சுகுமார்.''

''ரைட். எங்கே இருக்கே இப்போ?''

''வள்ளுவர் கோட்டம் வாசல்படியிலே கடலே தின்னுக்கிட்டிருக்கேன். வந்துட றியா?''

''வர்றேன். அங்கேயே இரு.''

**வ**ள்ளுவர் கோட்டத்தில் இலக்கியக் கூட்டத்திற்கு மைக் டெஸ்ட் செய்து கொண் டிருக்க... சைக்கிள்களிலும், ஸ்கூட்டர்களி லும் ஆர்வலர்கள் வந்து கொண்டிருந்தார் கள். டயர் வண்டி பஜ்ஜிக் காரன் ஸ்டவ் வுக்குப் பம்ப் செய்து கொண்டிருந்தான். சாலேயோரமாய்ச் சாரம் போட்டு அகல போர்டில் குளிர் பான விளம்பரத்தை பெட் ரோமாக்ஸ் வெளிச்சம் கொண்டு எழுதிக் கொண்டிருந்தவன் மனிதர்கள் கடக்காத போது பார்த்து வெற்றிலே எச்சில் துப்பிக் கொண்டான். தாமஸ் பெட்டிக் கடையில் கயிற்றின் முனையில் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு, நடந்து படிகளில் கர்சிப்பால் தட்டி அமர்ந்து காத்திருந்தான்.

கொஞ்ச நேரத்தில் வந்த சுகுமார், ''என்ன சொல்லு?'' என்றுன் செருப்பைக் கழற்றிக் காலின் கட்டை விரலில் நெட்டி முறித்துக் கொண்டு.

''பேப்பர் பார்த்தேன். திட்டப்படி அசோக் மாட்டிக்கிட்டதிலே சந்தோஷம். ஸ்டேஷன் போற வழியிலே அவன் தப்பிச்சதிலே டபுள் சந்தோஷம். போலீஸ் இதை வச்சே அவன்தான் குற்றவாளின்னு முடிவுக்கு வந்துடுவாங்க.''

தாமஸ், இதெல்லாம் பழைய கதை. நீ ஏன் திடீர்னு புறப்பட்டு வந்தே?''

''உன்னே எச்சரிக்க. ஒரு ரகசியத்தைச் சொல்ல.''

''என்ன ரகசியம்?''

''நீயும், உன் தங்கையும் திட்டப்படி நாக ராஜனே நான்தான் கொன்னுட்டதா நினேச்சுக்கிட்டிருக்கீங்க. அதான் இல்லே. நான் செயல்படுத்தறதுக்கு முன்னாடியே வேறே யாரோ முடிச்சிட்டாங்க.''

''என்னது?''

தாமஸ் விவரமாக எல்லாம் சொல்லி, ''நம்ம திட்டத்திலே எங்கேயோ ஓர் ஓட்டை இருந்திருக்கு. நாம போட்ட அதே திட்டப்படி அதே நேரத்திலே வேற ஒருத்தர் அதை நிகழ்த்தியிருக்காங்கன்னு... அது யாரு, என்ன காரணம்னு நாம கண்டுபிடிச்சிடறதுதான் நம்ம உயிருக்கு நல்லது'' என்றுன்.

(தொடரும்)

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — III

ராஜ்மோகன் காந்தி



# இடைக்கால அமைச்சரவை

## 6

மே 16 அறிக்கையைக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டபோதிலும் அதன் சில அம்சங்களை ஒப்புக் கொள்ளவில்லை. மூன்றுக் குப்பின் முரணான ஷரத்துக்களுடன் இருந்ததால் அதனை முஸ்லிம் லீக் ஒருமாதிரியாகவும் காங்கிரஸ் வேறு விதமாகவும் அர்த்தம் செய்து கொள்ள வாய்ப்பிருந்தது.

''காங்கிரஸ் மே 16 அறிக்கையை ஏற்றுக் கொண்டதாகக் கடிதம் 'எழுதியிருப்பது நேர்மையான உள்ளத்துடன் அல்ல'' என்று வைஸ்ராய் வேவல் தமது நாட்குறிப்பில் எழுதினார். ''அதே சமயம் காங்கிரஸின் கடிதம் மிகவும் சாமர்த்தியமாக மே 16 அறிக்கையை ஒப்புக் கொள்வதுபோல் தொனிக்கும்படியும் எழுதப்பட்டிருக்கிறது!''

முஸ்லிம் லீகினரே பிரதானமாக விளங்கக் கூடிய அமைச்சரவை ஜின்னாவின் கை நழுவிப் போய்விட்டது. காங்கிரஸ் நேர்மையற்ற முறையில் நடந்து கொள்வதாகவும், கிரிப்ஸும் பெதிக் லாரன்ஸும் அதற்குத் துணை போவதாகவும் ஜின்னா கூறினார்.

இந்தக் காலகட்டத்தில் காங்கிரஸ் தலைமையை நேரு ஏற்றது கவனிக்கத்தக்கது. ஆஸாதின் தலைமைப் பதவிக் காலம் முடிவுற்றது. மகாண காங்கிரஸ் கமிட்டிகள் ஸர்தார் பட்டேலே தலைவராக வேண்டும் என விரும்பின. ஆனால் காந்தியிடம் பிரச்னை சென்றபோது அவர் நேருவையே விரும்பினார். மகாத்மாவின் சொற்படி பட்டேல் தம் பெயரை வாபஸ் பெற்றுக் கொண்டார். 1929 கதை மறுபடி அரங்கேறியது! இடைக்கால மந்திரி சபை அமைய விருக்கிறது என்று காந்திக்குத் தெரியும். அதற்கு நேருவே தலைமை தாங்க வேண்டும் என்று காந்தி விரும்பியதும் புரிந்தது. பட்டேலின் குணச் சிறப்புக்களை காந்தியைவிட நன்கறிந்தவர் யாருமில்லை. ஆனால் முஸ்லீம்களுக்கு நேருவிடம்தான் அதிக மதிப்பு. சர்வதேச அரங்கிலும் நேருவுக்கே ஆளுமை அதிகம். மேலும் பட்டேல் காங்கிரஸின் வலது சாரியில் இருந்தார். நேருவோ காங்கிரஸின் துருவங்களை இணைக்கும் பாலமாக் விளங்கினார். இந்த மூன்று அம்சங்களை மகாத்மா ஒரு முடிவுக்கு வரப் போதுமானவையாக இருந்தன.

முஸ்லிம் லீக் தலைவர் போர்க் குரல் எழுப்பினார். பிரிட்டிஷார் காங்கிரஸின் ஒப்புதலை நிராகரிக்க வேண்டும் என்றும் தம்மையே அரசு அமைக்க அழைக்க வேண்டுமென்றும் ஜின்னா கூறினார். 'மே 16 அறிக்கைக்கு லீக் அளித்த ஒப்புதல் ஒன்றுதான் அசலானது; உள்நோக்கம் இல்லாதது' என்றார். தாம் எதிர்பார்த்தபடி பிரிட்டன் நடந்து கொள்ளாது என்பது புரிந்தபோது, 'அவ்வாறானால் லீக் தான் அளித்த ஒப்புதலை வாபஸ் பெறுகிறது' என்று அறிவித்தார். முஸ்லிம்களை பிரிட்டன் கைவிட்டுவிட்டதாகக் குற்றம் சாட்டினார். 'முஸ்லிம் லீக் நேரடி நடவடிக்கையில் இறங்கும்' என்று கூறினார். ஆகஸ்டு 16 நேரடி நடவடிக்கை தினமாகப் பிரகடனப்படுத்தப்பட்டது. அன்று முஸ்லிம் லீக் பிரமுகர்கள் தங்களுக்கு பிரிட்டன் அளித்திருந்த பதக்கங்களையும் விருதுகளையும் திருப்பித் தந்தனர்.

ஜின்னாவின் நேரடி நடவடிக்கைப் பேச்சு காரணமாக வேவலுக்கு முஸ்லிம் லீகிடம் எதிர்ப்புணர்வு ஏற்பட்டது. அவர், லண்டனின் ஒப்புதலுடன், காங்கிரஸ் தலைவர் நேருவை அழைத்து, இடைக்கால மந்திரி சபையாக அமையக் கூடிய ஒரு குழுவை உருவாக்குமாறு கேட்டுக் கொண்டார். வார்தாவில் காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடியது. அமைச்சரவை எடுக்கும் முடிவு



"பொண்ணோட தலைதீபாவளிக்கு என்ன வாங்கப் போறீங்க?"

"கடன்."

— காயத்ரி

களை வீட்டோ செய்து நிராகரிக்க வைஸ்ராய்க்கு அதிகாரம் இருந்தபோதிலும் பெரும்பாலும் அமைச்சர்கள் சுதந்திரமாக இயங்க அனுமதிக்கப்படுவார்கள் என்று தெரியவருவதால் வேவலின் அழைப்பை ஏற்கலாம் என்று காரியக் கமிட்டி முடிவு செய்தது. வைஸ்ராய் ஒப்புக்குத்தான் இருப்பார் என்று வெளிப்படையாகக் கூறப்பட வேண்டும் என்று நேரு விரும்பினார். ஆனால் ஸி.ஆர். 'ஏற்கெனவே தரப்பட்டுள்ள உறுதிமொழியே போதும். அதை நம்புவோம்' என்றார். மேலும், 'இப்போது அமைச்சரவை அமைக்கத் தரப்பட்டுள்ள வாய்ப்பை ஏற்காது போனால் ஜின்னா புரட்சியைத் தூண்டியுள்ள சமயத்தில் பயந்து போய்ப் பொறுப்பைத் தட்டிக் கழிப்பது போலாகிவிடும்' என்றும் ஸி. ஆர். கருதினார்.

ஆட்சி நடத்தக் கிடைத்த வாய்ப்பை எண்ணி காங்கிரஸ் மகிழ்ந்தாலும் முஸ்லிம் லீகையும் அமைச்சரவையில் சேர்ந்து கொள்ளுமாறு அழைப்பு விடுத்தது. ஆனால் ஜின்னா அதனை ஏற்கவில்லை.

**நே**ரடி நடவடிக்கை தினம் மறக்க முடியாத நாளாகிவிட்டது. வங்கத்தில் ஷூரவர்த்தி தலைமையில் அமைந்திருந்த முஸ்லிம் லீக் அரசு, பொது விடுமுறை அறிவித்தது. ஹிந்துக்கள் ஹர்தாலை அனுஷ்டிக்கவில்லை என்று குற்றம் சாட்டி, திட்டமிடப்பட்ட வகையில் குண்டர்கள் கூட்டம், கல்கத்தாவின் பல பகுதிகளைத் தாக்கியது. கொலை, கொள்ளை, தீவைப்பு, கற்பழிப்பு எல்லாம் நடந்தன. ஷூரவர்த்தி போலீஸ் கண்ட்ரோல் அறையில் அமர்ந்து கொண்டு ஹார்ட்விக் என்ற போலீஸ் தலைமை அதிகாரி எடுத்த முடிவுகளையெல்லாம் நிராகரித்து வந்தார். ஒரு சுற்றுக் கூடச் சுடாமல் இரண்டு நாட்கள் போலீஸ் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. ராணுவ தளபதி ஜெனரல் புச்சர், ஷூரவர்த்தி முழுக்க முழுக்க ஒருதலைப்பட்சமாக இனவெறி கொண்டு நடந்து கொள்வதாகக் கல்கத்தாவுக்கு வந்திருந்த வேவலிடம் குற்றம் சாட்டினார். பிரதமக் காரியதரிசி வாக்கரும் அவ்வாறே முறையிட்டார்.

தாக்குதலுக்கு எதிர்த் தாக்குதல் ஆரம்பமாயிற்று; தொடர்ந்தது. அதிகாரபூர்வமான புள்ளி விவரங்களின்படியே 5000 பேர் கொல்லப்பட்டனர்; 15000 பேர் காயமுற்றனர். ஷூரவர்த்தி எல்லாருடைய நம்பிக்கையையும் இழந்துவிட்டார் என்று வங்க கவர்னர் பர்ரோஸ் வைஸ்ராய் வேவலிடம் கூறினார். கவர்னர் ஆட்சிதான் பரிகாரம் என்று ஸி. ஆர். நினைத்தார். ஆனால் வேவலோ, காங்கிரஸையும், முஸ்லிம் லீகையும் நெருங்கி வரச் செய்வதே வழி என்ற எண்ணத்துடன் தில்லி திரும்பினார்.

இதற்கிடையில் தேசிய அரசை நிறுவுவதற்கு பிரிட்டன் தன்னைத் தயார் செய்து கொண்டது. அமைச்சரவை பதவிக்கு வருமென்பதால் ஸி.ஐ.டி.யின் ரகசிய தஸ்தாவேஜுகள் பலவற்றை அழித்துவிடப் போவதாகத் துப்பறியும் துறைத் தலைவர் ஸர் நார்மன் ஸ்மித், வேவலிடம் தெரிவித்தார். செப்டம்பர் 2ம் தேதி மந்திரி சபை பதவி ஏற்றது. நேரு, பட்டேல், ராஜேந்திர பிரஸாத், ஸி. ஆர்., அஸஃப் அலி, சரத் போஸ், ஜகஜீவன்ராம் ஆகியோர் அதில் இருந்தனர். சுயேச்சை முஸ்லிம் உறுப்பினர்களான இருவரும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். தவிர கிறிஸ்துவ, சீக்கிய, பார்ஸி வகுப்பினரின் பிரதிநிதிகளான ஜான்மத்தாய், பல்தேவ் சிங், ஸி. எச். பாபா ஆகியோரும் இடம் பெற்றனர்.

"முஸ்லிம் லீகும் பொறுப்பில் பங்கேற்கும் வரை மகிழ்ச்சிக்கு இடமில்லை" என்றார் ஸி. ஆர். ஆனால் பொதுவாக இந்தியா மகிழ்ந்து கொண்டுதான் இருந்தது. முதல்முறையாகப் புது தில்லி அதிகார பீடங்களை மக்களின் ஆதரவு பெற்ற பெருந்தலைவர்கள் அலங்கரித்தார்கள். அவர்கள் பிரிட்டிஷ் அரசின் சிபாரிசின் பேரில் பிரிட்டிஷ் அரசரால் நியமிக்கப்பட்டவர்களே என்றாலும் அவர்களுக்கு அதிகாரங்கள் நிறையவே இருந்தன.

ஸி. ஆர். தொழில் அபிவிருத்தி மற்றும் அத்தியாவசியப் பண்டங்கள் விநியோகம் ஆகிய துறைகளை எடுத்துக் கொண்டார். நேரு அயல்நாட்டு உறவுகளைக் கவனித்துக் கொண்டார். பட்டேல் உள்துறை அமைச்சரானார்.

முதலில் நிதி அமைச்சர் பதவிதான் ஸி. ஆருக்குத் தரப்பட்டது. ஆனால் ஸி. ஆர். தமது உடல்நிலையைக் காரணம் காட்டி அதை ஏற்க மறுத்துவிட்டார். தில்லியில், அவரது சகாக்கள் பதவிப் பிரமாணம் ஏற்ற போது ஸி. ஆர். சென்னையில் எக்ஸிமா காரணமாக சிகிச்சைக்கு ஆஸ்பத்திரியில் சேர்ந்திருந்தார். மற்றவர்களுக்கு ஒன்பது நாட்களுக்குப் பிறகுதான் இவர் பதவி ஏற்றார்.

உயர் பதவி ஏற்க தில்லிக்கு விமானமேறுவதற்கு முன்பு ஸி. ஆர். சென்னையில் சொன்னார். "நமது முஸ்லிம் சகோதரர்களின் சந்தேகங்களையும் பயங்களையும் நீக்க இயன்றதையெல்லாம் செய்வோம்.... நான் தில்லி செல்கிறேனேயொழிய என் இதயம் சென்னையில்தான் இருக்கும்...."

(தொடரும்)

தமிழாக்கம்: **கி. ராஜேந்திரன்**

2.11.86



# கல்கி

தீபாவளி சிரிப்பிதழ்
தயாரிப்பு: அகஸ்தியன்



காதலின் ஆழ்ந்த உணர்வுகளுக்குத் தொடர்கதை வடிவம் தருகிறார் உஷா சுப்பிரமணியன்:

## மோகம் என்பது இதுதானா?

பாசத்தின் தளிர் உணர்வுகளுக்குத் தொடர்கதை வடிவம் தருபவர் சுபா:

## சின்னச் சின்ன கனவுகள்



மற்றும்: **பரபரப்பான முழு நீள நாடகம்**

அதிக பக்கங்கள்:: அதே விலை!

# "தமிழகத்தில் பெண்ணரசி ஆட்சி வந்தே தீரும்!"



● தம் இரு குழந்தைகளுடனும் சாமியார்

ஆளுயர. அகல கேட்கள். அகலமான திறந்தவெளியில் ஒரு ரிப்பன் பச்சை. மையத்தில் கம்பீரமான அந்த மண்டபம். மண்டபத்தின் மழுமழுப்பான தரையில் பெரும்பகுதியை மறைத்துக் கொண்டு அந்த வண்ணப் பாய். பன்னிரண்டு ஆட்கள் உறங்கக்கூடிய அந்த அகலப் பாயில் ஒற்றை மனிதர். இடையில் காவி. மேலே ஒரு மஞ்சள் துண்டு:

''எங்கேர்ந்து வர்றீங்க சாமி?'' — சாமி என்றது நம்மை. பேசும் போது இலக்கில்லாமல் நிறுத்தப்பட்ட கண்கள்.

''மெட்ராஸ்லேர்ந்து வர்றோம்... உங்களுக்குப் பார்வை...?''

''ரெண்டு கண்ணும் தெரியாது சாமி... பதினேழு வயசில வயல்ல வேலை செய்ஞ்சிட்டிருந்தேன். உழும் போது மாடு வாலை சேறோட சேர்த்துக் கண்ல அடிச்சது... பெரிய பெரிய டாக்டர்ங்க பார்த்தும் ஒண்ணும் செய்யமுடியலே... இனிவாழவே வேண்டாம்னு தற்கொலை பண்ணிக்க முடிவு செய்ஞ்சேன். அப்ப பழனியாண்டவர் என் கனவில வந்தாரு. 'உன் எதிர்காலத்துக்கு நான் உதவி செய்யறேன்'னு உத்தரவு கொடுத்தாரு. பாலகிருஷ்ணன்னு இருந்த நான் ராஜயோகின்னு பேரை மாத்திக்கிட்டேன். எல்லாம் முருகன் கிருபை... இப்ப இங்க கோயில் கட்டிட்டு வழிபட்டுக்கிட்டிருக்கேன்...''

''நீங்க அரசியல்வாதிகளுக்கு நெருக்கம்னு சொல்றாங்களே...''

''ஆமா சாமி... மினிஸ்டர்ங்க கூட என்கிட்ட குறிகேட்டுக்கிட்டு வருவாங்க... ராசாராம் வீட்டுக்குக் குடும்ப நெருக்கம்னு வச்சுக்குங்களேன்... இப்ப திருநெல்வேலி தேர்தல் வந்தப்ப கூட ஆர். எம். வீ. ஆளனுப்பி விசாரிச்சாருங்க. நிச்சயமா ஜெயம் உங்களுக்குத்தான்னு சொன்னேன். தேர்தலுக்கு உதவியா என் பேரால அவரை ஆதரிச்சு நோட்டீஸ் போட்டுக்கட்டுமான்னு கேட்டாங்க. நானும் சரின்னேன். அம்மா, நோட்டீஸ் ஒண்ணு இவங்களுக்குக் கொடு...''

அவருடைய தாயார் — வெள்ளைச் சேலை. எங்களைப் பார்த்துச் சற்றே சந்தேகம். அ.தி.மு. க. வுக்கு ஆதரவு கேட்கும் நோட்டீஸ் கைக்கு வந்தது.

''அப்ப நீங்க அ. தி. மு. க. சாமியாருன்னு சொல்லுங்க!''

''அப்படியெல்லாம் ஒண்ணுமில்ல... தி.மு.க. ஜெயிக்கும்னு தோணி இருந்தா அவங்களுக்கு இதுமாதிரி நோட்டீஸ் போட அனுமதி

கொடுத்திருப்பேன். குறி கேட்கும்போது யாருக்கு வெற்றி வரும்னு என் மனசுக்குத் தோணுதோ. அவங்களுக்குத்தானே ஆதரவு கொடுக்க முடியும்...! என்ன சாமி, நான் சொல்றது?

"தமிழக அரசியல்,எதிர்காலத்தில எப்படி இருக்கும்?"

"ஸ்ரீரங்கத்தில ராஜகோபுரம் உசரட்டும் சாமி. சிலோன் ஒண்ணு அடிமைப்பட்டுடும். இல்ல அழிஞ்சு போயிடும். தமிழ்நாட்டுல அப்புறம் பெண்ணரசி ஆட்சி வந்தே தீரும்..."

"ஜெயலலிதாவையா சொல்றீங்க? நீங்க ஆர். எம். வீ. ஆதரவாளர்னு சொன்னீங்க?"

"சி. எம். ரெண்டு பேரையும் ரெண்டு கண்ணுத்தான் வச்சிருக்கார். ஆட்சின்னு வர்றப்ப ரெண்டு பேரும் ஒத்துமையாத்தான் இருப்பாங்க... நாமதான் மல்லுக் கட்டிக் கிட்டு நிக்கறோம். என்ன சாமி நான் சொல்றது?"

"நீங்க சொல்லுகிற படி நடந்தால் சந்தோஷம்தான்... சாமிக்குக் குடும்பம்?" என்று இழுத்தோம்.

"பெண்டாட்டி இருக்கா... அருள் கனின்னு ஒரு பொண்ணு, திருக்குமரன்னு ஒரு பையன்!

"உங்க ஊர்ல கிழக்குப் பக்கம் ஒரு பாலம் கட்டணும்.வடக்குப்பக்கமும்போக்குவரத்து வசதிக்காக ஒரு பாலம் கட்டணும்னு சொல்றாங்களே ... மினிஸ்டர்ங்க கிட்ட நீங்க எடுத்துச் சொல்லலாமே..."

"வாஸ்தவந்தான் சாமி. மழை பேய்ஞ்சா எங்கேயும் போக முடியாது. நான் போய் சொல்லத்தான் போறேன்... அரசியல் வாதிங்க மட்டுமில்ல. கோயமுத்தூர், சேலம் இங்க இருக்கற பெரிய பணக்காரங்களும் ரொம்ப உதவி செய்யறாங்க. கோயமுத்தூர் டாக்டர் ஒருத்தர் எனக்கு கார் வாங்கிக் கொடுத்திருக்காரு... எனக்கு டெலிஃபோன் கூட இருக்கு... நான் ஒண்ணுமில்லாதவனா இருந்தேன். இன்னிக்கு இவ்வளவு செல்வாக்கோட இருக்கேன்... எல்லாம் அந்த முருகனோட கிருபை... என்ன சாமி நான் சொல்றது?"

முருகன் கிருபையால் தம்மை வளர்த்துக் கொண்ட ராஜயோகி சாமியார், இனி முருகன் அருளால் தமது கன்னித்தேவன் பட்டி கிராமத்தின் அபிவிருத்திக்கும் பாடு படப் போவதாகச் சொன்னது நம்பிக்கை ஏற்படுத்தியது. அந்த நம்பிக்கை முருகன் அருளால் பொய்த்துப் போகாதிருக்கட்டும்! ஏனெனில் கன்னித்தேவன் பட்டிக்குக் குடி தண்ணீர் வசதி, பஸ் வசதி முதல் வெள்ளத் தடுப்புச் சுவர், மேம்பாலம் வரை பல தேவைகள் பூர்த்தி செய்யப்படக் காத்திருக்கின்றன. தேர்தல் சமயத்தில் வாக்குக் கேட்க வரும் அரசியல்வாதிகள் அப்புறம் மறந்து போகிற எத்தனையோ கிராமங்களில் ஒன்றாக விளங்கும் கன்னித்தேவன் பட்டியை சாமி யாரும் முருகனும் கவனித்தால்தான் உண்டு!



அவர்: பியூனே இந்த ஆபீஸை விட்டு மாற்ற அரசியல்ரீதியாகப்போனாலும் நடக்கலே!

இவர்: என்ன ஆச்சு?

அவர்: நான் எம். எல். ஏ.யைப் பிடிச்சால் அவன் மந்திரியையே பிடிச்சுடு றான்.

— சரஸ்வதி பஞ்சு



"மணப்பெண், முதலிரவு அறைக்குள் பால் கொண்டு போறதுக்குப் பதிலா சோடா கொண்டு போறாளே, ஏன்?"

"மாப்பிள்ளே அரசியல்வாதி யாச்சே!"

— எஸ். முகம்மது யூசுப்



அவர்: உங்க பையன் தண்ணியைப் போட்டுக்கிட்டு இப்படி ஆடுறானே! அவனுக்கு அட்வைஸ் பண்ணக் கூடாதா நீங்க?

இவர்: அட்வைஸ் பண்ணினேனே! இந்த அட்வைஸை ஏன் தண்ணி போட ஆரம்பிக்கிறதுக்கு முன்னேயே பண்ணலே? இப்பப் பழக்கத்தை எப்படி சட்டுனு நிறுத்துறதுன்னு என்கிட்டே திருப்பிக் கேட்கிறான்.

— சரஸ்வதி பஞ்சு

# சிகரத்தை எட்டும் சங்கரநாராயணன்!

'போன வாரம்தானே இன்னாருடைய கச்சேரி கேட்டோம்? மறுபடி இன்று கேட்கா விட்டால் என்ன? வேறு யாராவது பாடுகிறார் களா பார்ப்போம்' என்று தோன்றுவது இயல்பு. ஆனால், 'போன வாரம் பலானவருடைய கச்சேரி கேட்டோமே, இன்றைக்கும் அவர் பாடுகிறார் போலிருக்கே, மிஸ் பண்ணக் கூடாது. கண்டிப்பாகப் போக வேண்டும்' என்று ஆர்வத்துடன் புறப் படுவது அபூர்வம். அத்தகைய அபூர்வப் பாடகர்களில் ஒருவராக இன்று விளங்கு கிறவர் டி. வி. சங்கரநாராயணன்.

'அப்படி என்ன அவரிடம் அபூர்வ சக்தி இருக்கிறது?' என்று கேட்டால் மிக எளி தாகப் பதில் கூறிவிடலாம், 'அவரிடம் இல் லாதது இல்லை' என்று. சங்கீத ஞானம் ரத்தத் திலேயே ஊறிப் போயிருக்கிறது. 'மாமா மதுரை மணி அய்யர்' என்று சொன்னால் போதாதா? சாரீரவளமோ, தெய்வானுக்கிரக மாகக் கிடைத்திருக்கிறது. இவற்றுக்கும் மேலே ரசிகர்களை எப்படிக் கவர்வது, திருப்திப்படுத்துவது என்ற ரகசியம் அவருக் குத் தெரிந்திருக்கிறது!

அண்மையில் ஓம் விக்னேசுவரா கல்சுரல் அகாடமியிலும் கிருஷ்ணகான சபையிலும் ஒரு வார இடைவெளியில் சங்கரநாரா யணன் கச்சேரிகளைக் கேட்க நேர்ந்தது. வினாடி நேரமேனும் அலுப்புத் தட்ட வேண் டுமே? கிடையாது! 'இதை விட அதுவா, அதை விட இதுவா, எது உயர்வு?' என்று தீர்மானிக்க முடியாதபடி ஒன்றுடன் ஒன்று போட்டியிட்ட கச்சேரிகள். உயர்வான ராக ஆலாபனை; கலகலப்பான சுவரப் பிரஸ் தாரம்; உணர்ச்சி மயமான பாட்டு; ஜிலுஜிலுப்பான பிருகாக்கள், ஒரே குஷி தான் போங்கள்!

கச்சேரியை அமைத்துக் கொள்வது என் பதே ஓர் அரிய விஷயம். சங்கர நாராயணன் அதிலும் சமர்த்தராக விளங்குகிறார். பழைய நினைவுகளைக் கிளறும் பாடல்களை நிகழ்ச்சி யில் சேர்த்துக் கொள்கிறார். புதிய பாடல் களைப் பாடுகிறார். கனமான ராகங்கள், லேசான ராகங்கள் தவிர, ஓரிரு ராகங்களை அறிமுகப்படுத்தவும் செய்கிறார். இவை எல்லாவற்றையும் விட முக்கியம் தமிழ்ப் பாடல்களை நிறையப் பாடுகிறார். ரசிகன் மனம் லயிக்கக் கேட்பானேன்!



எல்லாம் சரி, பாவ பூர்வமாகப் பாடு கிறாரா என்று கேட்டால், பூர்வமாக மட்டு மல்ல, பூர்ணமாகவே பாடுகிறார் என்பது தான் பதில். 'நீ என்ன சிலையோ?' என்று பூர்வி கல்யாணியில் ஒரு நிரவல் செய்தார் பாருங்கள்! இந்த நிரவலைக் கேட்ட பிறகும் சிலையாகவே இருக்கும் இறைவன் மீது கோபம் கோபமாக வந்தது. நமக்குச் சக்தி இருந்தால் அவன் காதைத் திருகி இழுத்து வந்து இவர் முன் நிறுத்திவிட வேண்டும் என்பது போல் ஒரு வேகம் உள்ளத்தில் உண் டாயிற்று! 'சிலையோ' என்ற சொல்லை அத் தனை உருக்கமாக, குழைவாக, கெஞ்சலாகப் பாடினார் டி. வி. எஸ். அதேபோல் தோடியில் 'காலினில் சிலம்பு கொஞ்ச' என்ற பிரபல மான வரியைத்தான் எத்தனை நெளிவு சுளிவு களுடன் பாடினார்? கண்ணனின் கால் சிலம்பு தான் எப்படியெல்லாம் நம்மிடம் கொஞ்சி விளையாடியது! 'குழந்தைக் கண்ணனின் நர்த்தனத்தை நேரில் காண முடியாத கண்கள் கிடக்கட்டும், இந்தச் சிலம்புக் கொஞ்சலைக் கேட்க இந்தக் காதுகளுக்குக் கொடுத்துவைத்திருந்ததே போதும்!' என்றல் லவா தோன்றிவிட்டது!

கல்கி எழுதுவார், 'மேலே மேலே, இன் னும் மேலே, அதற்கும் மேலே' என்று. அப்படி 'ஜிவ்'வென்று உயரே போய்ச் சஞ்சரிக் கும் சங்கர நாராயணன், பாகு இழை யாகக் கார்வை கொடுத்து நிற்கும் சங்கர நாராயணன், அதே நேரத்தில் சுருதியையும் எப்படியோ விட்டு விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறார். பிசிர் தட்டாமல் அந்தக் காத்துக் கொள்கிற ஆற்றல்தான் எத்தனை நேரமானாலும் இன்னும் ஒரு பாட்டுப் பாட மாட்டாரா என்று நம்மை ஏங்க வைத்து விடுகிறது!

இந்நாளில், 'கர்நாடக சங்கீதத்தைக் கேட்க இளைஞர்கள் தயங்குகிறார்கள்' என்ப தாகப் பேசப்படுகிறது. அப்படித் தயங்கும் இளைஞர்கள் யாரேனும் இருந்தால், இன்று தமது கலைவாழ்க்கையின் சிகரத்தை எட்டிக் கொண்டிருக்கிற சங்கர நாராயணன் கச்சேரி செய்ய, ஒரே ஒருமுறை கேட்டுவிட்டு வரட் டும். பிறகு 'சாஸ்திரீய கர்நாடக சங்கீதத்துக்கு ஈடு இணையே இல்லை' என்று சத்தியம் பண்ணு வார்கள்!

— குட்டி கிருஷ்ணன்



# புனித விஜயதசமியில்

## உங்கள் வாழ்க்கையிலே ஒரு பொன்னான வாய்ப்பினை உங்களுக்காகவே அளிக்கிறோம்.

- மின்சார ரயில் நிலையத்திலிருந்து 12 நிமிட நடை தூரம்
- அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனை திட்டம்
- 5000 மத்திய அரசு ஊழியர் குடியிருப்பு திட்டத்தை அடுத்தது

சென்னை பீச் ஸ்டேஷனிலிருந்தும், பாரி முனையிலிருந்தும்

அடிக்கடி மின்சார ரயில் மற்றும் பஸ் போக்குவரத்து

வற்றாத நிலத்தடி நீர். தண்ணீர் தேங்காத மனைப் பரப்பு.

# ஸ்ரீ முப்பாத்தம்மன் நகர்

DTP அங்கீகாரம் பெற்ற எண CSAR/DTCPM86/217/LP176

கவர்ன்மெண்ட் பிளீடரிடம் இருந்து சட்டக் கருத்து பெறப்பட்டது

முரளி அளிக்கும் அங்கீகாரம் பெற்ற மனைகள் பாங்கு காஷ் சர்டிபிகேட் போல உத்திரவாதமுள்ளவை. எந்நேரமும் உங்கள் அவசர தேவைக்கு மனைகள் எங்களிடமே திருப்பியளித்து உங்கள் மூலதனத்தை வாங்கிய தேதியிலிருந்து கவர்ச்சியான வட்டியுடன் திரும்ப பெறலாம்.

வண்டலூர் மிருககாட்சி சாலை அருகில். பொறியியல் கல்லூரி, சாட்டிலைட் டவுன் ஷிப் பள்ளிகூடங்கள், மருத்துவமனை, மற்றும் கூடுவாஞ்சேரி ரயில்வே நிலையத்திலிருந்து 12 நிமிட நடை தூரம். தேசீய நெடுஞ்சாலையை (G.S.T. ரோடு) அடுத்து மத்திய அரசு ஊழியர்கள் வீடு கட்டும் திட்டத்திற்கு அருகில்.

# 1800 சதுர அடி ரூபாய் 7,900 (III)

அட்வான்ஸ் ரூ. 500/- மீதி தொகை இரண்டு மாதத்தில் செலுத்தலாம்.

சுலபமான தவணை முறையிலும் கிடைக்கும்

**12.10.86** விஜயதசமி அன்று பகல் 1.31 மணிக்கு மனை சுளைப் பார்வையிட ரூ. 10/- முன் பணம் செலுத்தி பதிவு செய்து கொள்ளவும்



# முரளீஸ் எஸ்டேட்ஸ்

12, ராமசுவாமி தெரு, தியாகராயநகர்

சென்னை – 600017

# பாதுகாப்பும் — நம்பிக்கையும்

## ஸ்ரீ ராகவேந்த்ரா பைனான்சியர்ஸ் (ரிஜிஸ்டர்டு)

எண் 19, லேக் முதல் குறுக்குத் தெரு, சென்னை-34. போன்: 479705

**(ஹையர் பர்சேஸ் & ஜெனரல் பைனான்ஸ்)**

உங்களின் முதலீட்டிற்கு முழு நம்பிக்கையுடன் கூடிய இணையில்லா நன்மைகள் வழங்கும் எங்களது டெபாசிட் திட்டங்கள் கவர்ச்சிகரமான வட்டி விகிதத்தில் ஏற்றுக் கொள்ளப்படும்.

இந்திய அரசினுடைய மற்றும் ரிசர்வ் பேங்கியின் சட்ட திட்டங்களின் எண்ணிக்கைக்குட்பட்டு முதலில் வரும் டெபாசிட்டுகளை மட்டுமே ஏற்றுக் கொள்ள இயலும்.

பிக்சட் டெபாசிட் திட்டம்

| வருடம் | 1 | 2 | 3 |
|---|---|---|---|
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 14% | 15% | 16% |

டெபாசிட்டுகள் குறைந்தது ரூ. 3,000/-ம் அதற்கு மேல் ரூ. 1,000/-ன் மடங்குகளாகவும் பெற்றுக் கொள்ளப்படும். மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வட்டித் தொகைகள் அனுப்பி வைக்கப் பெறும்.

குமுலேடிவ் டெபாசிட் திட்டம்

| டெபாசிட் வருடம் | டெபாசிட் தொகை | திரும்பி அளிக்கப்படும் தொகை |
|---|---|---|
| 1 | ரூ. 1,000/- | ரூ. 1,150/- |
| 2 | ரூ. 1,000/- | ரூ. 1,348/- |
| 3 | ரூ. 1,000/- | ரூ. 1,564/- |

**என். கே. வாசன்,**
மானேஜிங் பார்ட்னர்.

---

# கொசுக்கள் உங்கள் தூக்கத்தைக் கெடுக்கின்றனவா?



**உபயோகியுங்கள் ஓடோமாஸ்—
உறங்குங்கள் நிம்மதியாக**








BALSARA

**ஓடோமாஸ்**
**கொசுக்களின் எதிரி**

CHAITRA-B BLS 546 TAM



# மெல்லத் திறந்தது கதவு

கிராமத்துக்கு நாட்டுப் பாடல்களைச் சேகரிக்க வரும் மாமனிடம் மனத்தைப் பறி கொடுத்துவிட்டு அவனைச் சுற்றிச் சுற்றி வரும் ராதா முதல் நாயகி. வாண்டுகளைத் துணைக்குச் சேர்த்துக் கொண்டு லூட்டி அடிப்பது, ராதாவையே நினைத்து உருகும் செந்திலை டபாய்ப்பது போன்ற சமாசாரங்கள் 'ஏற்கெனவே பார்த்த' படங்களை நினைவுக்குக் கொண்டு வருகின்றன. மோகன் டேப் ரிகார்டரை ஆன் செய்ததும், சற்றே வெட்கிக் கொண்டு, கொஞ்சமாய் நெளிந்து கொண்டு கிராமியப் பாடல்களைக் கூச்சத்துடன் பாடும் காட்சிகளில் ராதாவின் எக்ஸ்பிரஷன் பிரமாதம். விசு ஒரு எக்ஸ்ட்ரா டானிக். 'எங்க பரம்பரைக்குத் தெரிஞ்சதெல்லாம் நேர்மை, எருமை, கருமை' — செந்திலின் பிரதான மந்திரம். பயில்வானிடம் உடற்பயிற்சிக்குப் போவதும், நானூற்று சொச்ச ரூபாயை ஏமாந்த ஆள் போல் கொடுத்து மீட்டுக் கொள்வதும் ரசமான காட்சி.

விசு வார்த்தைக்கு வார்த்தை 'மாப்பிளே' என்று கூப்பிடும் போது ஆட்சேபணை சொல்லாமல், சாகக் கிடக்கும் தறுவாயில் அவர் கேட்டபோது பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதாய் வாக்குக் கொடுத்து விட்டு அப்புறம், 'கல்யாணம் பண்ணும் ஆசையே எனக்கு இல்லை' என்று மோகன் பின் வாங்குவது மகா பெரிய ஓட்டை.

அவர் ஏன் பின்வாங்கினார் என்பதுதான் பின்கதை — ஸாரி, இரண்டாவது கதை.

இண்டர்வெல்லுக்கு அப்புறம் அமலா. இசைக் கல்லூரியில் மோகனுடன் படிக்கும் நூர்ஜஹானாக. பாத்திரமே ரொம்ப மேம்போக்காக இருப்பதால் அவர் காலூன்றவே வாய்ப்பில்லாமல் போகிறது. உடம்பையெல்லாம் கறுப்புத் துணியால் மூடி, சல்லடை போன்ற துணி வழியே பார்வையை மட்டும் வெளியே விட்டுப் பூர்விக் மோகனைக் காதல் வலையில் மாட்டும் இந்த நாயகி, 'என் முகத்தைக் காட்ட மாட்டேன், காட்ட மாட்டேன்' என்று சீண்டப் போக, கடைசி வரை அந்தக் கண்களை மட்டுமே மோகன் பார்க்க நேரிடுவது பரிதாபம். அமலாவுக்கு இளமை இருக்கிறது. இந்தப் படத்தில் வேலை இல்லை.

எழுதப் படிக்கத் தெரியாத ராதா க்ளைமாக்ஸில் கடிதம் (முத்து முத்தான கையெழுத்து!) எழுதி வைத்து விட்டுத் தற்கொலை செய்து கொள்ளப் புறப்பட்டுப் போவது எந்த லாஜிக்கில் சேர்த்தியோ?

மோகனுக்கு இந்தப் படத்திலும் கட்டாய ஓய்வு.

எம். எஸ். வி., இளையராஜா இரண்டு பேரும் இணைந்து செவிக்கு விருந்து படைக்கிறார்கள்.

இண்டர்வெல்லுக்கு முன்னால் ஒரு கதை. இண்டர்வெல்லுக்கு அப்புறம் ஒரு கதை. இரண்டு கதாநாயகிகள், இரண்டு மியூஸிக் டைரக்டர்கள் என்று படமே இரண்டு பட்டு நிற்கிறது.

— ஜெயமன்மதன்


* கிகார்ட் தங்கம்


* பெருந்தன்மை


* சின்னத்தனம்

## நீங்கள் கேட்டவை — தராசு


* 'இச்'

* ரேவதி ப்ரியன், ஈரோடு — 1.

? தமிழக இ. காங்கிரஸ் கோஷ்டிச் சண்டை ஓயவே ஓயாதா?

! கட்சி செயல்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது என்பதை வேறு எப்படிக் காட்டிக் கொள்வதாம்!

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? சென்னைக் குழாய்த் தண்ணீரால் தீராத தலைவலிக்குள்ளாகி அவதி பொறுக்க முடியாமல்தான் மே. வங்கத்தைச் சேர்ந்த பதினெட்டு வயது இளைஞர் தற்கொலை செய்து கொண்டாராமே?

! நிஜமாக இருக்க முடியாது. தமிழகத்திலுள்ள (கோவையைத் தவிர) மற்ற மாவட்டங்களில் வழங்கப்படும் குடிநீரைக் குடித்துப் பார்த்தால்தான் சென்னைக் குடிநீர் எப்படிப் பட்டதோர் தேவாமிர்தம் என்பது புரியும் நண்பரே!

* ஆற்காடு எழிலன், திருச்சி — 2.

? மக்கள் தற்சமயம் எதை எதிர்பார்த்து வோட்டுப் போடுகிறார்கள்?

! நமது மக்கள் எதையோ எதிர்பார்த்துத் தான் வோட்டுப் போடுகிறார்கள் என்றால், இந்தத் தேசம் எந்தக் காலத்திலேயோ வளர்ந்திருக்கும். உண்மையில் நாம் வோட்டுப் போடுவதெல்லாம் இரக்கப்பட்டுத்தான். அதனால்தான் அரசியல் நாணயம் அரிதாகி விட்டது. எதிர்காலத்திலாவது அறிவுபூர்வமாகச் சிந்தித்து வோட்டுப் போடாவிட்டால், மிக மோசமான விளைவுகளைத்தான் சந்திக்க வேண்டியிருக்கும்.

* எஸ். ஆர். லதா, அய்யம்பேட்டை.

? தமிழ்நாட்டிலுள்ள போக்குவரத்துக் கழகங்களுக்கு ஈடு இணை, வேறு எந்த மாநிலத்திலும் இல்லைதானே?

! உண்மைதான். ஆனால் இதிலேயே நாம் திருப்தியடைந்துவிட முடியாது. வெளிநாடுகளை ஒப்பிடும்போது இன்னும் ஏகப்பட்ட அபிவிருத்திக்கு இடமிருக்கிறதே!

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? தமிழக அரசு பரிசுச் சீட்டுத் திட்டத்தைத் தனியார் வசம் ஒப்படைக்க அரசு உத்தேசித்துள்ளது குறித்து?

! பாண்டிச்சேரி லாட்டரி விவகாரம் தெரியாதா உங்களுக்கு? வருமானத்தைப் பெருக்க வேண்டும் என்ற ஒரேயொரு நோக்கத்திற்காகத்தான் அப்படி உத்தேசிக்கப்பட்டுள்ளது. 'யாருடைய வருமானம்?' என்று மட்டும் கேட்காதீர்கள்!

* இரா. சுவாமிநாதன், சீர்காழி.

? சமீபத்தில் உங்களைத் திகைப்பில் ஆழ்த்திய நிகழ்ச்சி?

! திகைப்புடன் கூடிய வேதனை! அலுவலகம் செல்லும் வழியிலுள்ள ஒரு சாராயக் கடையில் 'ஜே! ஜே!' என்று திருவிழாக் கூட்டம் மாதிரி ஆண்களின் கூட்டம். அந்தத் திடீர்க் கூட்டத்திற்கு என்ன காரணமென்று விசாரித்த போது, 'சாராயத்தைத் தள்ளுபடி விலையில் தருகிறார்கள். அதனால்தான் அதிகாலை நான்கரை மணியிலிருந்து நள்ளிரவு பன்னிரண்டு மணி வரை இப்படியொரு கூட்டம்!' என்றார்கள். இந்தத் தேச நலனிலும் சகோதர மக்கள் நலனிலும் அக்கறையுள்ள ஒருத்தனால் எப்படி இந்த அசிங்கத்தை நினைத்து வேதனைப்படாமலும் வெட்கப்படாமலும் இருக்க முடியும்?

* ஜே. பாலசந்திரன், நீடாமங்கலம்.

? வீட்டில் மனைவி தரும் கண்டல், கடற்கரையில் கண்டல் விற்பவன் தரும் கண்டல்—

ஒப்பிடுக!

! நவராத்திரியின் பாதிப்பா? நல்லது! சுண்டலை விடப் பல சமயங்களில் சுண்டல் தருபவரைப் பொறுத்தும், எந்தச் சூழ்நிலையில் அதைச் சாப்பிடுகிறோம் என்பதைப் பொறுத்தும்தான் சுண்டலின் சுவையே கூடுகிறது.

* ரா. சுந்தர், வால்குடி.

? நீங்கள் மிகவும் புகழ்ந்து எழுதிய கொடைக்கானல் சப் — கலெக்டர் குர்னிகால் சிங்கின் வீட்டில் இருந்து, ஜெனரல் வைத்யா கொலை வழக்கில் தேடப்பட்ட யாதவிந்தர் சிங் கைது செய்யப்பட்டிருக்கிறாரே?

# நீங்கள் புகழ்ந்த குர்னிகால் சிங்கின் தம்பி கைதாகியுள்ளாரே?

! விசாரணையில் யாதவிந்தர் சிங் மீதுள்ள குற்றச்சாட்டு நிரூபிக்கப்படுமானால், அவர் தண்டிக்கப்பட வேண்டியவர்தான் என்பதில் இரண்டு கருத்துக்களே இல்லை. ஆனால் இதைப் பயன்படுத்திக் கொண்டு, குர்னிகால் சிங்கைப் பழிவாங்கத் துடிக்கும் நமது தமிழக அரசின் போக்குத்தான் கேவலத்திலும் கேவலம். குர்னிகால் சிங்கை 'ஓர் எதிர்க்கட்சித்தலைவரைப்போல்தான் செயல்படுகிறார்' என்று வீரப்பன் வர்ணித்திருப்பது வருந்தத்தக்கது. சொந்தச் சகோதரனை என்றாலும் போலீஸார் தேடுகிறார்கள் என்ற செய்தியறிந்ததும் தாமே தமது தம்பியைப் போலீஸில் ஒப்படைத்தது அவரின் பெருந்தன்மையல்லவா! தேச பக்தி அல்லவா! அது எத்தனை பேருக்கு வரும்?

* கே. இரஞ்சனிப்ரியன், பள்ளிபாளையம்.*

? 'என் மீது கூறப்பட்ட ஊழல் புகார்கள் பற்றி விசாரணை நடத்தட்டும்; விசாரணையைச் சந்திக்கத் தயாராய் இருக்கிறேன்!' என்று மத்திய நிதியமைச்சர் வி. பி. சிங் அறிவித்துள்ளது பற்றி?

! என்னைப் பொறுத்தவரை வி. பி. சிங் மீது கூறப்படும் குற்றச்சாட்டுக்கள், லஞ்ச ஊழல், கறுப்புப் பணத்தை எதிர்த்து அவருடைய அதிரடி நடவடிக்கைகளைக் கண்டு அஞ்சியும் கோபம் கொண்டும் கிளப்பிவிடப்படும் குற்றச்சாட்டுக்களாகத்தான் தெரிகின்றன. 'விசாரணையைச் சந்திக்கத் தயாராக இருக்கிறேன்' என்று கூறியது மட்டுமின்றி, அந்த விசாரணையை நடத்த எதிர்க்கட்சித் தலைவர்களையே அழைக்கிற 'தில்' அவருக்கு இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

* ஆர். மைதீன் பாட்சா, வல்லம்.

? தியாக வரலாறு இன்றைய அரசியல்வாதிகளிடம் இருக்கிறதா?

! இல்லாமலென்ன! தேர்தல் வெற்றிக்குப் பிறகு, வாக்காளர்களையும் தொகுதியையும் சுத்தமாகத் தியாகம் செய்து விடுகிறார்களே, அது என்ன லேசுப்பட்ட காரியமா?

* கமலஹாசப்ரியன், காரிமங்கலம்.

? 'அரக்க ஸ்பைல்கள் ஆமையை விட மெதுவாக நகருகின்றன!' என்று நெடுஞ்செழியன் கூறியிருக்கிறாரே?

! ஆமைகளை அவமதித்து விட்டார்!

* சரோஜினி, சென்னை.

? கானல்நீர் என்று கார்ட்டூன் போட்டீரே? பி. டி. உஷா தங்கத்தைத் தட்டிக் கொண்டு வந்து விட்டார் பார்த்தீரா?

! அந்தக் கார்ட்டூன் பொய்யாகிப் போனதில் நம்மைவிட மகிழ்ச்சி அடைபவர் யாரும் இருக்க முடியாது. அதுவும் புதிய ரிக்கார்ட் ஏற்படுத்தினார் உஷா என்பதால் இரட்டிப்பு மகிழ்ச்சி. கூடவே ஷைனியின் துரதிர்ஷ்டத்தால் இந்தியாவுக்குக் கிடைத்திருக்க வேண்டிய மற்றொரு தங்கம் கிட்டாமல் போனதில் வருத்தம். அந்த வருத்தம் கோபமாகிறது; நமது விளையாட்டு வீரர்களுக்கு அடிப்படைத் தேவையான இரவுண்ட் ரூல்ஸ் கூடச் சரியாகப் போதிக்கப்படவில்லை என்பதைக் கவனிக்கும் போது! அந்தக் கோபம் இரட்டிப்பாகிறது, வி.சி. சுக்லாவும் மற்றவர்களும் தப்பு நடந்த பிறகு அதைக் கௌரவமாக ஒப்புக் கொள்ளாமல் வாதாடுகிற முறையில் அறிக்கை விட்டுக் கொண்டிருப்பதைக் காணும்போது!

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

கே. இரஞ்சனிப்ரியன்,
எஸ். ஆர். வி. ஸென்ஸ்,
பள்ளிபாளையம்,
ஈரோடு — 6.

**வாழ்க்கை வாழ்வதற்கே!**

# எமனின் கை குலுக்கித் திரும்பியவர்கள்!



'தற்கொலை செய்து கொள்ள முயல்வது குற்றமாகாது' என்று பம்பாய் உயர் நீதி மன்றம் ஒரு தீர்ப்பு வழங்கியிருக்கிறது. அந்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர் வாழ முயன்று, சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்டதில் ஏமாற்றமுண்டாகித் தன் ஆயுட்காலத்தை முடித்துக் கொள்ள முற்பட்டிருக்கலாம். அப்போதும்கூட உயிர் வாழ ஒருவனுக்கு இருக்கும் உரிமையை இந்த ஜனநாயகம் உறுதிப்படுத்தவில்லை என்பதால் ஆட்சியைத்தான் குறைகூற வேண்டுமே தவிர, தற்கொலையை நியாயப்படுத்துவது சரியல்ல.

சாவதற்கு உரிமை கோரக் கூடியவர்கள் ஒரே ஒரு பிரிவினர்தான். ஏதாவது கொடிய நோயால் பீடிக்கப்பட்டு இனி குணமாகவே வழியில்லை என்ற முற்றிய நிலையிலும் இன்றைய மருத்துவ விஞ்ஞானம் ஒருவனை இயந்திரங்களின் உதவியுடன் செயற்கையாக உயிர் வாழச் செய்கிறது. இத்தகையவர்களின் மன, உடல் வேதனைகளை நீடிக்கச் செய்வதோ அல்லது நினைவிழந்த நிலையில் ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாது படுத்த படுக்கையாக மாதக் கணக்கில் ஏன் வருஷக் கணக்கில் கூடக் கிடக்க அனுமதிப்பதோ சரியல்ல. இயற்கையாக மரணம் இவர்களை அணைக்க விட்டுவிட வேண்டுமேயல்லாது செயற்கையாக உயிர் வாழச் செய்வது மருத்துவம் அல்ல, கொடிய சித்திரவதை. இதை உணர்ந்து பலர் இன்று திடகாத்திரராக இருக்கும்போதே டாக்டருக்குத் தமது வேண்டுகோளை எழுதி வைக்கிறார்கள்!

'இப்படி அல்லாடுவதற்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம்' என்பது போன்ற சலிப்பான வார்த்தைகளைத் தாராளமாக உதிர்க்கிறோம். ஆனால் உயிரை அத்தனை சுலபமாக விட்டுவிட முடிகிறதா என்ன? அன்றாட வாழ்க்கையில் உயிரின் மதிப்பை உணராமல் சர்வசகஜமாக ஏற்றுக்கொள்வது போலவே சாவிலும் அதன் மதிப்பை அதிகமாக உணர்ந்துவிட முடிவதில்லை. நண்பர் அல்லது உறவினர் காலமானால் வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆனாலும் 'எல்லோருக்கும் ஒருநாள் நேர வேண்டியதுதானே' என்று நாளடைவில் சமாதானம் செய்து கொள்கிறோம்.

உயிரின் மதிப்பை உண்மையிலேயே மிக நன்றாக எப்போது உணர்கிறோம் என்றால் எமலோகத்தின் வாசல் படியை நெருங்கி விட்டு அதை மிதிக்காமல் அதிர்ஷ்டவசமாகத் திரும்பி விடுகிற சமயத்தில்தான்! கொலை பாதகனின் துப்பாக்கித் தோட்டா ராஜீவ் காந்தி மீது பாயாமல் குறி தப்பியது என்று அறிந்தபோது முதலில் ஏற்பட்ட அதிர்ச்சி நீங்கியதும் நம் மனம் எப்படிக் குதூகலித்தது! இறைவனுக்கு நன்றி செலுத்தியது! சென்னை விமான நிலையத்தில் விமான விபத்தில் நமது அபிமான நட்சத்திரம் கமல் உயிர் தப்பினார் என்று அறிந்தபோது எத்தனை மகிழ்ச்சி உண்டாயிற்று!

'வேறு பல விபத்துக்களைவிட விமான விபத்து எப்போதுமே மிகச் சோகமானது' என்று எழுதினார் ராஜாஜி. மனித உயிர்கள் எல்லாமே விலை மதிக்க முடியாதவைதாம். அதில் ஏற்றத் தாழ்வு என்பதும் இல்லை. ஆனால் விமான விபத்தில் மரணமடைய நேர்பவர்கள் பெரும்பாலும் மிகப் பெரிய விஞ்ஞானிகள், தொழிலதிபர்கள், கலைஞர்கள் என்றுதான் இருப்பார்கள். இவர்கள் ஒவ்வொருவரையும் நம்பி ஒரு குடும்பம் அல்ல ஆயிரக்கணக்கான குடும்பங்கள் இருக்கும். (சென்னை விமான விபத்தில் உயிர் தப்பியவர்களில் தொழிலதிபர் டி.டி. வாசுவும் ஒருவர்.) இந்த மேதைகள் மரணமடைய நேர்ந்தால் அந்தக் குடும்பங்கள் தவிப்பது மட்டுமல்ல, நாட்டின் எதிர்கால வளமும் பெருமளவுக்குப் பாதிக்கப்படும். எனவே மற்ற எல்லா வாகனங்களையும்விட விமானங்களைச் சின்னக் கோளாறுகூட இன்றிப் பாதுகாக்க வேண்டும். துர்திர்ஷ்டவசமாக நமது இந்தியன் ஏர்லைன்ஸ் இதில் போதிய கவனம் செலுத்துவதாகத் தெரியவில்லை. இல்லாதுபோனால் சென்னை விபத்து நடந்த இரண்டாவது நாளே, விசாகப்பட்டினத்திலிருந்து சென்னைக்குப் புறப்பட்டு ரன்வேயில் ஓடத் தொடங்கிய விமான இஞ்சினிலிருந்து புகை வர, அந்தப் பயணமே ரத்து செய்யப்பட நேர்ந்திருக்குமா?

— ஜீவன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).
Assistant Editor: P. S. Mani. Editor: K. Rajendran.



# எண்ணெய் இருக்கும் வரை எண்ணிலடங்காப் பலன்களைப் பெற்றுவிடுவோம்.

இயற்கை அளித்த மிகவும் விலை மதிப்பற்ற எண்ணெய் வளத்தி-லிருந்து முழுமையான பலனைப் பெறுவது எப்படி என்பது குறித்து எம்.ஆர்.எல்லில் ஆராய்ச்சி நடந்து வருகிறது. கச்சா எண்ணெயி-லிருந்து புதுப் புதுப் பொருட்களைப் பெற்றிடவும் சோதனைகள் நடந்து கொண்டே இருக்கின்றன. இயற்கை அளித்துள்ள எரிபொருள் நாளுக்கு நாள் குறைந்து வரும் தற்போதைய நிலையில் இந்த எரிபொருளிலிருந்து அதிகபட்ச பலனை இந்தியா பெற வேண்டும் என்பதே இந்த ஆராய்ச்சியின் நோக்கம்.

1984-இல் கார்ப்பரேட் திட்டத்தின்படி அமைக்கப்பட்ட எம்.ஆர்.எல்லின் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்திப் பிரிவானது, இந்திய அரசு அறிவியல் மற்றும் தொழில் நுணுக்கத்துறையால் அங்கீகரிக்கப் பட்டுள்ளது. ஏற்கனவே, இந்தத் துறை இரு புதிய திட்டங்களை நிறைவேற்றியுள்ளது.

- உற்பத்தி அளவு, உற்பத்தி முறை சம்பந்தப்பட்ட அளவுகள் ஆகிய வற்றில் உச்ச நிலையை எட்டு-வதற்கும், புதிய கிரியா ஊக்கி கள் உருவாவதற்கு உதவும் வகை யிலும் ஒரு பரீட்சார்த்த எப்.சி.சி. ஆலை அமைக்கப்பட்டுள்ளது.
- புதிய கிரியா ஊக்கிகள் உருவா வதற்காக சென்னையில் உள்ள இந்திய தொழில் நுணுக்கக் கல்லூரியில் எம்.ஆர்.எல். ஆதரவில் ஆராய்ச்சித் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருகிறது.

பல்வேறு கச்சா எண்ணெய் வகைகள், பெட்ரோ கெமிக்கல் இடைநிலைப் பொருட்கள், லூப் எண்ணெயிலிருந்து பிரிக்கப் படும் பொருட்கள் ஆகியவை பற்றிய ஆராய்ச்சியும் நடத்தப்பட்டு வருகிறது. உற்பத்தி முறையில் ஏற்படுகிற இடையூறுகளை அகற்றி உற்பத்தியைப் பெருக்குவது, ஹெக்ஸேன் போன்ற கரைப்பான்கள், ப்யூட்டிலீன், ப்யூட்டாடயின் போன்ற பெட்ரோ கெமிக்கல் மூலப் பொருட்களை உற்பத்தி செய்வது, பாலிப்யூட்டாடயின் மற்றும் இதர ரசாயன ரப்பர் வகைகளைத் தயாரிப்பது ஆகியவற்றுக்கான சாத்தியக் கூறுகளையும் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்திப் பிரிவு ஆராய்ந்து வருகிறது.

நாட்டின் வளத்தைப் பெருக்க உதவும் நேசக்கரம்—எம்.ஆர்.எல்.




**மதராஸ் ரிஃபைனரீஸ் லிமிடெட்**

477-482 அண்ணா சாலை, நந்தனம்
சென்னை-600 035

K SWAMY/MRL/4161

REGISTERED No. M. 4302
Registered as a Newspaper in Sri Lanka

மென்மையான மிருது
வண்ணங்களிலோ,
பளிச்சிடும் பன்னிற
கலவையிலோ, கண்ணைக்-
கவ்வும் அச்சழகுடன்,
ராஜ்கமல் காட்டன் மற்றும்
பாலியெஸ்டர் புடவைகள்
நிகரற்ற கவர்ச்சி
யம்சத்துடன்
மிளிர்கின்றன.



# The blend of beauty and elegance!

kiron/rks/86/2

Cinestar Jayaprada in
Rajkamai Polyester Saree

# ராஜ்கமல்

பாலியெஸ்டர் மற்றும் காட்டன் ப்ரிண்டட் புடவைகள்